# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 18.01.2009 • ரூ 10.00 • 96 பக்கங்கள்



அப்பாவுக்கு 'நோ' மகனுக்கு 'யெஸ்'



தி.மு.க.வை எப்படி ஆதரிப்போம்?

—ராமதாஸ் கேள்வி

புத்தம் புது தொடர்கள்

- சொல்வாசம்
- ஹாய் டார்லிங்!

# பொங்கல் ஸ்பெஷல்

# Dr. KAMAKSHI MEMORIAL HOSPITAL

#1.RADIAL ROAD, PALLIKARANAI, CHENNAI- 600 100
PH: 22469200 66300300 9840049561. FAX: 22463282 66300400
E-mail: info@drkamakshimemorialhospital.org. Webside: drkamakshimemorialhospital.org.





Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

Dr.Kamakshi Memorial Hospital, Pallikaranai about 2kms from Velachery, is a 150 bedded super specialty hospital has created great strides in the field of health care in a very short duration. Started just three years ago, the hospital has turned out to be a referral institution. It has borne all specialties and state-of- the art facilities under roof. However it has evolved as a main referral centre in fields such as Cardiology, Cardiothoracic surgery, neurology and neuro surgery and Cancer treatment. Being the only major hospital in this part of the city, the hospital has evolved as a major trauma care centre. With round-the- clock casualty serviced and ICU managed in house intensivists it has saved many lives of accident victims. The hospital is also planning for an on-going trauma awareness and preventive programme. The hospital is the only one of its kind in this part of the world having all specialists starting from General Medicine & Intensive Care through Radiation Oncology services under one roof. The hospital has well qualified specialists offering high quality services in various specialities of Medicine & Surgery. Recently the hospital has the pride of inaugurating PET CT – the first of its kind in Tamilnadu in collaboration with Cancer institute, Adyar.

Principle: The guiding principle of the hospital is to offer the ***latest in health care facilities at Par with international standards (obviating the need to go abroad for treatment) and also make them available to increasing numbers of our population.***

To meet the stringent demands of quality health care the services of several talented and dedicated medical professionals (both within the country and overseas) has been and a huge investment made in infrastructure and medical equipments.

***ALL FACILITIES UNDER ONE ROOF.***



CT-SCAN



LINAC



CATH LAB



CABG UNDER PROCESS



NEURO SURGERY



PET-CT – FIRST IN TAMILNADU

CARDIOLOGY, NEUROSURGERY, LAPAROSCOPY & ENDOSCOPY, CARDIAC SURGERY, NEPHROLOGY, OBSTERTICS & GYNAECOLOGY, TRAUMA CARE, ORTHOPAEDICS, GASTROENTEROLOGY, NEUROLOGY, NUCLEAR MEDICINE, ENT & OPHTHALMOLOGY, UROLOGY, BLOOD BANK, MAXILLOFACIAL SURGERY, ONCOLOGY – SURGICAL – RADIATION & MEDICAL ONCOLOGY

PET CT CENTRE AT CANCERINSITUTE (WIA)CANAL BANK ROAD, GANDHI NAGAR, ADYAR,CH-20
24 HRS PHARMACY & AMBULANCE SERVICES AVAILABLE



## Dr. KAMAKSHI GROUP OF HOSPITALS

LAKSHMI NURSING HOME, PALLAVARAM
PET – CT CENTRE, ADYAR
Dr. KAMAKSHI MEMORIAL MULTSPECIALITY CENTRE

# கல்கி




## பொங்கல் ஸ்பெஷல்!

தஞ்சாவூர்க் கவிராயர்

எழுதும்

36

# சொல்வாசம்

- கவிதைத் தொடர்



டாக்டர்

விஜய் நாகஸ்வாமி

எழுதும்

7

# ஹாய் டார்லிங்!

- குடும்ப நலத் தொடர்

அடுத்த இதழில்...

## காற்று வரும் பருவம்!

- பாரதிபாலன் தொடர்கதை

# நியூஸ் பாய்

'இந்தி கஜினி' வெற்றி கொடுத்த உற்சாகத்தில், மீண்டும் ஆமிர்கானை ஹீரோவாகப் போட்டு ஒரு இந்திப் படத்தை இயக்கவிருக்கிறாராம் ஏ.ஆர்.முருகதாஸ். பேச்சுவார்த்தை முடிந்து அச்சாரம்கூட வாங்கியாயிற்றாம்.

*(ஷாருக்கான் காதுல ஒரே புகையாமே.)*

'தனம் புகழ்' சங்கீதா, தன் தம்பி பரிமளுக்கு ஹீரோ வேடம் கட்டும் முயற்சியில் நெடுநாட்கள் ஈடுபட்டுக் கொண்டிருந்தாராம். அவரது முயற்சி சமீபத்தில் பலித்திருக்கிறது. இப்போது தம்பி பரிமள் 'ஓடிப்போலாமா' படத்தின் ஹீரோ!

*(படம் தியேட்டரை விட்டு ஓடிப் போகாம பார்த்துக்கணும்!)*

'வல்லமை தாராயோ' மதுமிதாவின் இயக்கத்தில், ஒரு படத்துக்கு 'திரைக்கதை - வசனம்' எழுதவிருக்கிறாராம் நகைச்சுவை எழுத்தாளர் கிரேஸி மோகன். இதற்கிடையே தமது 'சாக்லேட் கிருஷ்ணா' நாடகத்தை சென்னை மேயர் வந்து பார்த்து விட்டு வாழ்த்தியதில் ஏக சந்தோஷமாம்.

*(புதிய கூட்டணி ஜெயிக்கட்டும்!)*

'பொல்லாதவன்',



'படிக்காதவன்' என தொடர்ந்து ரஜினி பட டைட்டிலில் நடித்து வரும் தனுஷ், இனி இதுபோல தமது படத்துக்கு டைட்டில் வேண்டாம் என முடிவெடுத்திருக்கிறாராம்.

*(என்ன நடந்துச்சோ யாருக்குத் தெரியும்!)*

**ஒ**ரு தனியார் இணைய தளத்தில் நடத்தப்பட்ட 'அழகான தமிழ் நடிகை' வாக்கெடுப்பில் அம்மணி நயன்தாராவுக்கு ஐந்தாம் இடம்தான் கிடைத்ததாம்.

*(லிங்குசாமிக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கும்!)*

**'உ**ள்ளே' போன இயக்குநர் சீமானை 'மண் மணம் கமழும் இயக்குநர்' இன்றுவரை சென்று பார்க்கவே இல்லையாம். தன்னைப் பார்க்க வருபவர்களிடம் இதைச் சொல்லிச் சொல்லி புலம்புகிறாராம் சீமான்.

*(பார்க்கப் போகக் கூடாதுன்னு மேலிடத்து உத்தரவா இருக்கும்.)*

**'ச**த்யம்' படம் ஊத்திக்கொண்டதால் விஷால், தன் மேனேஜர், பி.ஆர்.ஓ., டிரைவர்... என அனைவரையும் மாற்றிவிட்டாராம்.

*(முதல்ல கதையை மாத்தச் சொல்லுங்க அப்பு!)*

**வைகை**ப்புள்ள வடிவேலுவின் ஒரு நாள் சம்பளம் மட்டும் எட்டு லட்சமாம். 'ஒரு படத்துக்கு' என்று பேசினால் ஒரு கோடியைத் தாண்டுகிறதாம்.

*(இதை வைத்து விவேக் காமெடி பண்ணாமல் இருந்தால் சரி!)*

**ந**டிகர் சரத்பாபு, இரண்டு வருடங்களுக்கு முன்பு தான் நடிப்பதற்காக வாங்கிய அட்வான்ஸ் பணம் ஐம்பதாயிரத்தை, படத்தில் நடிக்காததால் தயாரிப்பாளரிடமே திருப்பிக் கொடுத்திருக்கிறாராம்!

*(இது நயன்தாராவுக்குத் தெரியுமா?)*




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**
உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**
தொலைநகல் : **044 - 4343 8899**
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



**இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.**

# சுழற்றி அடிக்கும்

**1970**களில் சென்னை மாநகராட்சியைக் கலக்கியது 'மஸ்டர் ரோல் ஊழல்'. அந்த ஊழலுக்குப் பிறகு மாநகராட்சியே கலைக்கப்பட்டது. நீண்ட காலம் அதிகாரிகளின் ஆளுகைகளின் கீழிருந்த மாநகராட்சியில், அதன் பிறகு பெரிய அளவிலான ஊழல்கள் எதுவுமில்லை. 1996க்குப் பிறகு, மு.க.ஸ்டாலின் பதவிக் காலத்தில் துப்புரவுப் பணிகளை 'ஓனிக்ஸ்' நிறுவனத்துக்குக் கொடுத்ததில் கமிஷன் கைமாறியதாகப் பேச்சு அடிபட்டது. அதன் பிறகு இப்போது சுகாதார ஆய்வாளர்கள் நியமன விவகாரத்தில் ஊழல் நடைபெற்றதாக வெளிவரும் செய்திகள் நம்மைச் சுழற்றி அடிக்கின்றன.

### குற்றச்சாட்டுகள்

மாநகராட்சியிலுள்ள சுகாதார ஆய்வாளர்களுக்கான பணியிடங்களுக்கு (Sanitary inspector) நேர்முகத் தேர்வில், ஏற்கெனவே அரசுத் துறையில் பணியாற்றி வரும் 167 பேர்களுக்குக் கலந்துகொள்ள அழைப்பு அனுப்பப்பட்டதில் முறைகேடுகள் நடந்திருக்கின்றன. ஏற்கெனவே வேலை கிடைத்தவர்களுக்கு, மறுபடியும் அதே போன்ற வேலைகளுக்காக மீண்டும் பட்டியலை வேலை வாய்ப்பு அலுவலகம் எப்படி அனுப்பியது? அப்படி அனுப்பப்பட்டவர்களும் பதவிக்கான முழுத் தகுதி இல்லாதவர்கள். மேலும், இப்போது அந்த நபர்கள் பணிபுரியும் அலுவலகங்களில் மற்றொரு பணிக்கு விண்ணப்பிக்க தடையில்லாச் சான்றிதழ் எப்படிக் கொடுத்தார்கள்? இந்த 167 பேர்களுக்காக மாநகராட்சி இரண்டாவது முறையாக நேர்முகத் தேர்வு நடத்தியது எப்படி?

### மேயர் என்ன சொல்கிறார்?

''சென்னை மாநகராட்சியில் 83 சுகாதார ஆய்வாளர் பணியிடங்கள் நீண்ட காலமாகவே காலியாக உள்ளன. இதனால் மாநகராட்சியின் துப்புரவுப் பணிகள் பாதிக்கப்படுகின்றன. இதற்கு 2007ல் நடவடிக்கை எடுக்கப்பட்டது. நேரடியாக யாரிடமும் விண்ணப்பம் கேட்கவில்லை. விதிகளின்படி, வேலை வாய்ப்பு அலுவலகத்திடம் தகுதியான நபர்களின் பட்டியல், பதிவு மூப்பு அடிப்படையில் கேட்கப்பட்டது. இந்தப் பதவிக்குத் தேவையான கல்வித் தகுதி பி.எஸ்ஸி., மற்றும் காந்தி கிராமப் பல்கலைக்கழகம் வழங்கும் பொது சுகாதாரம் டிப்ளமா. இந்த அடிப்படையில் வேலை வாய்ப்பு தலைமை அலுவலகம் பட்டியல் அனுப்பியது. அப்போது சில மாவட்டங்களில் உள்ளவர்கள், 'நாங்கள் விடுபட்டுப் போய்விட்டோம். எங்களையும் அழைக்க வேண்டும்' என்று நீதிமன்றம் சென்றார்கள். அதன் பிறகு நீதிமன்ற வழிகாட்டுதல்படி, தமிழ்நாடு முழுவதிலுமிருந்து பதிவு மூப்பு அடிப்படையில் பட்டியல் கேட்டு வாங்கப்பட்டது. அந்தப் பட்டியல்படி இப்போது நேர்முகத் தேர்வு நடத்தப்படுகிற

● மேயர் மா. சுப்ரமணியன்



சென்னை மாநகராட்சி

# சுகாதார முறைகேடுகள்!

**ஏற்கெனவே அரசுத் துறையில் பணியிலுள்ள 167 பேருக்கு, சென்னை மாநகராட்சி இரண்டாவது முறையாக நேர்முகத் தேர்வு நடத்தியது எப்படி?**

தருணத்தில்தான் இக்குற்றச்சாட்டுகள் சொல்லப்பட்டன.

**நடந்தது என்ன?**

நேர்முகத் தேர்வுக்கு வந்தவர்களில் 65 பேர் தற்போது தமிழக அரசின் பணியில் இருப்பவர்கள். எனவே அவர்களைத் தேர்வில் பங்குகொள்ள அனுமதிக்கவில்லை. மற்றபடி வேலையில்லா, முற்றிலும் தகுதியுள்ள 63 பேர், நேர்முகத் தேர்வுக்கு வந்திருந்தார்கள். அவர்களிடம் தேர்வு நடத்தப்பட்டு, அந்த அடிப்படையில் தேர்வுப் பட்டியல் தயார் செய்யப்பட்டு, நியமன கமிட்டி மற்றும் கவுன்சில் அனுமதி பெற்று நியமனம் செய்வோம். இதில் யாருடைய தலையீடும் இருக்காது. மாநகராட்சியைப் பொறுத்தமட்டில் எந்த முறைகேடுகளும் கிடையாது. முதல்வர் கலைஞர், உள்ளாட்சித் துறை அமைச்சர் ஸ்டாலின், வழிகாட்டுதலில் நாங்கள் நேர்மையாகப் பணியாற்றிக் கொண்டிருக்கிறோம்'' என்கிறார் மேயர் மா. சுப்ரமணியன்.

**நோய்த் தடுப்புத் துறை என்ன சொல்கிறது?**

''எங்கள் ஆரம்பச் சுகாதார நிலையங்களில் பணியாற்றுபவர்களை, வேறு

தாமதம் ஆகும். இந்த இடை வெளியில் வேறொரு அலுவல கத்துக்கு வேலை வாய்ப்பு அலுவலகம் பெயரை அனுப்ப வாய்ப்புண்டு'' என்கிறார் பொதுச் சுகாதார மற்றும் நோய்த் தடுப்புத் துறை இயக்குநர் இளங்கோ.



**எழுத்துத் தேர்வுக்குப் பிறகு நேர்முகத் தேர்வு எனக் கட்டாயமாக்க வேண்டும். இல்லையேல் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை மாநகராட்சி சர்வீஸ் கமிஷனிடம் விட்டுவிடவேண்டும்.**

வேலைக்குச் செல்லக்கூடாது என்று தடுப்பது அடிப்படை உரிமைகளுக்கு எதிரானது. கிராமங்களைவிட சென்னை யில் சம்பளம் அதிகமாதலால், சென்னை யில் பணியாற்ற அவர்கள் ஆர்வம் காட்டலாம். அதிகச் சம்பளத்தில் ஒருவர் வேறு வேலைக்குச் செல்ல விரும்பினால் தடையில்லாச் சான்றிதழ் கொடுப்போம். மற்றபடி ஏற்கெனவே தமிழக அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பெயர் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் நீக்கப் படாததற்குப் பல காரணங்கள். இன்னா ரைத் தேர்ந்தெடுத்தோம் என்று கடிதம் அனுப்பும் முன்பு, அவரைக் குறித்த போலீஸ் அறிக்கை மற்றும் கல்வித் தகுதி குறித்த சோதனைகளுக்குப் பிறகுதான் அவர்கள் நிரந்தரமாகப் பொறுப்பில் அமர வாய்ப்புண்டு. அதன் பிறகு வேலை வாய்ப்பு அலுவலகத்துக்கு இறுதித் தகவல் அனுப்பப்படும். இதற்குக் கொஞ்சம் கால

**வில்லங்கமான வேலை வாய்ப்பு அலுவலகம்!**

வேலை கிடைத்தவர்களின் பெயரை நீக்காமல் வைத்திருக்க 'சம்திங்' பெறும் பழக்கம், அங்கே உண்டு என்று வேலை யில்லா இளைஞர்கள் கூறுகிறார்கள். பதிவு மூப்பை மாற்றி, பெயரை அனுப்புவதற் கும் 'உரிய கட்டண'த்தை ஊழியர்கள் வசூலித்து விடுவார்களாம்.

**என்ன செய்ய வேண்டும் மாநகராட்சி**

காலி இடங்களை நிரப்புவதில் வெளிப்படையான செயல்பாடு தேவை. எழுத்துத் தேர்வுக்குப் பிறகு நேர்முகத் தேர்வு என்று கட்டாயமாக்க வேண்டும். இல்லையேல் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை சர்வீஸ் கமிஷனிடம் விட்டு விட வேண்டும்.

**- கௌசி**

# ஹாய்... 1 ...டார்லிங்!

ஷார்ட் கட் சிதைவு

குறிப்பு: இத்தொடரில் இடம் பெற்றுள்ள மாடல் படத்துக்கும் தொடருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

படம்: ஸ்ரீஹரி

''ராஜ்! ஒரு சந்தோஷமான விஷயம்! ஆஃபீஸ்ல என்னை ஒரு புது ப்ராஜெக்ட்டுக்காக ஒன்பது மாசம் அமெரிக்காவுக்குப் போறியான்னு கேட்டாங்க! உடனே 'யெஸ்' சொல்லிட்டேன். எல்லாம் பிளான்படி நடந்தா, அடுத்த மாசம் இரண்டாவது வாரம் நான் நியூஜெர்சியில இருப்பேன்'' என்றாள் ரம்யா.

''ஓ! தட்ஸ் நைஸ்!'' என்று ராஜேஷ் சொன்னாலும்கூட, முகத்தில் 'அப்செட்'.

''ஏன் உனக்கு இஷ்டம் இல்லையா?''

''அப்படின்னு இல்லை! ஓ.கே. சொல்றதுக்கு முன்னாடி என்கிட்டே ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமே?''

''வெக்கேஷனுக்குப் போகணும்னா ரெண்டுபேருமா சேர்ந்து முடிவெடுக்கலாம். எங்க கம்பெனியில, ப்ராஜெக்ட் விஷயமா பேசும்போது நான் என் ஹஸ்பெண்டைக் கேட்டு சொல்லறேன்னா சொல்ல முடியும்? டோன்ட் பீ சில்லி ராஜ்!''

''உனக்கு வாழ்க்கையில ஹஸ்பெண்டைவிட மத்த எல்லாம் முக்கியம்கிறது தெரிஞ்சதுதானே?''

''யு.எஸ். பிளான் ஒழுங்கா ஒர்க் அவுட்

டாக்டர் விஜய் நாகஸ்வாமி

ஆகணுமேன்னு நானே டென்ஷனா இருக்கேன். நீங்க என்னடான்னா பர்மிஷன் டொனேஷன்னுட்டு. இதுக்குமேல எதுவும் பேசாதீங்க ப்ளீஸ்!'' ரம்யா காஃபி டம்ளரை 'ணங்' என்று வைத்து விட்டு, பாத்ரூமுக்குள் புகுந்து கொண்டாள்.

**எ**ன்ஜினீயரிங் படித்த ரம்யா, ஒரு சாஃப்ட்வேர் கம்பெனியில் வேலை பார்த்துக்கொண்டிருந்தபோதுதான், அவளுக்குத் திருமணம்.

'கல்யாணத்துக்குப் பிறகு வேலையை விடும் எண்ணம் எனக்கு இல்லை' என்று ராஜேஷிடமும், அவனது குடும்பத்தினரிடமும் சொல்லிவிட்டாள். அவனும் சாஃப்ட்வேர் என்ஜினியர். புரிந்து கொண்டான்.

தனிக்குடித்தனம். காலையில் கார்ன் ஃப்லேக்ஸ். இரவு மட்டும்தான் வீட்டில் சமையல் என்றாலும், நாள் முழுக்க வேலை செய்துவிட்டு வீடு திரும்புகிறபோது, இரண்டு பேருக்குமே அலுப்பாக இருக்கும். அது சின்னச் சின்ன விஷயங்களில் எரிச்சலாக வெளிப்படும்.

'வேலைக்குப் போவதில் தவறில்லை; ஆனால் இப்படி வீட்டைக் கவனிக்கக்கூட நேரமில்லாம இருந்தா எப்படி?' -ராஜேஷ் மனத்துக்குள் முணுமுணுப்பு அதிகமாகி வெளியே கசிந்தது. 'எனக்கு வேலை முக்கியம் என்பதை தெளிவாகச் சொல்லி விட்டேனே! இப்போது பிரச்னை பண்ணினால் என்ன அர்த்தம்?' எதிர்ப்பில் ஒளிவு மறைவு இல்லை!

வீடு ஏறத்தாழ ஹாஸ்டல் ஆனது. ஒரு கட்டத்துக்குப் பிறகு தாம்பத்ய உறவு நின்றுபோய்விட்டது!

இச் சூழ்நிலையில்தான் ரம்யா அமெரிக்காவுக்குப் போவது பற்றி தன்னிச்சையாக முடிவெடுத்தாள்!

**அ**டுத்த நாள் ஆஃபீஸ் போனவுடன் ரம்யாவைப் பற்றி நீண்டதொரு குற்றப் பத்திரிகையை அவளுக்கு இ-மெயிலில் அனுப்பினான். அடுத்த அரை மணியில் ரம்யாவிடமிருந்து ஃபோன். தன் தரப்பு வாதங்களை ஆரம்பித்தாள். ''எனக்கு ஒரு அவசர மீட்டிங் இருக்கு.'' ஃபோனை வைத்துவிட்டான் ராஜேஷ்.

**டாக்டர் விஜய் நாகஸ்வாமி, இருபத்தைந்து ஆண்டு அனுபவமுள்ள மனநல மருத்துவர். ஆங்கில நாளிதழ்களில் மனித உறவுகள், மனநலம் குறித்து ஏராளமான கட்டுரைகள் எழுதுபவர். ஏற்கெனவே மணவாழ்க்கை குறித்தும் மனச் சிதைவு குறித்தும் இரு புத்தகங்கள்**



*''மாப்பிள்ளையை போட்டோ எடுக்கற போட்டோகிராஃபர் 'ஸ்மைல் ப்ளீஸ்'னு சொல்றாரே... இதிலிருந்து என்ன தெரியுது?''*

*''கல்யாணத்துக்குப் பிறகு ஒரு ஆம்பள சிரிக்கிறது எவ்வளவு கஷ்டம்னு...''*

*- அதிரை புகாரி*

எழுதியுள்ளார்.

லேட்டஸ்ட் புத்தகம் The Twenty Four x Seven Marriage பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது.

அவரது முதல் தமிழ்த் தொடர் இது.



''ஐ ஹேட் யூ!'' என்று எஸ்.எம்.எஸ். அனுப்பின கையோடு, ரம்யா தன் தரப்பு நியாயங்களையும், கோபத்தையும் கொட்டி ஒரு பதில் இ-மெயில் அனுப்பிவைத்தாள்!

**ந**வீன திருமணங்களில், 'டார்லிங்', 'டியர்' என்று காதல் சொட்டும் அழைப்புகளும் அந்தரங்க பரிமாற்றங்களும் எவ்வளவு சுலபத்தில் நிகழ்கின்றனவோ, அவ்வளவு வேகத்தில் வெறுப்பும் பிரிவும் அரங்கேறுகின்றன. இதற்குத் தோன்றா துணையாகிவிட்டன ஈமெயிலும் செல்ஃபோனும்! காதலுக்கும் காமத்துக்கும் வேகம் கூட்டும் இச்சாதனங்கள், ஒரு வீட்டைப் பகிர்ந்து கொள்ளும் மனிதர்கள் முகத்துக்கு நேராகப் பேசத் தயங்கும் கடுஞ்சொற்களை விரல் நுனி வழியே விட்டவிழ்க்கவும் பயனாகின்றன! விவாதிக்க நேரமின்றி, சின்ன விஷயங்களை விவகாரமாக்கி மனவிகாரங்களை அவர்கள் கொட்டுகிறார்கள். அலுவலக உபயோகத்துக்கும் அவசர அழைப்புக்கும் ஏற்பட்ட தொடர்பு சாதனங்கள், குடும்ப வாழ்வை ஷார்ட் கட்டில் சிதைக்கவும் 'உபயோகமாகிக் கொண்டிருக்கின்றன!

''**உ**ங்கள் ரெண்டு பேருக்கும் இடையில் ஒத்துப்போக முடியாத பட்சத்தில், டைவோர்ஸ் கேட்டு, குடும்ப கோர்ட்டில் மனு தாக்கல் செய்துவிடுங்கள்'' ரமாவின் சீனியர் 'அனுபவ' அட்வைஸ் அள்ளி வழங்கினார்! சில மாதங்களுக்கு முன்னர் தான் அவருக்கும் அவர் மனைவிக்கும் 'மியூச்சுவல் கன்சன்ட் டைவோர்ஸ்' ஆகியிருந்தது.

ரம்யாவுக்கு முதலில் அதிர்ச்சி. ''மியூச்சுவல் கன்சன்டில் விவாகரத்துப் பெற வேண்டுமானால் நீங்கள் இரண்டுபேரும் பிரிந்திருக்க வேண்டும் என்பது சட்டம். நீயோ, அடுத்து ஒன்பது மாதங்கள் அமெரிக்காவில் இருக்கப் போகிறாய். இன்றைக்கே ராஜேஷிடம் மேட்டரைப் பேசிவிடு. பேப்பர்களை ரெடி பண்ணு. அமெரிக்காவுக்குப் புறப்படுவதற்கு முன்னால் குடும்ப கோர்ட்டில் சமர்ப்பித்துவிட்டால் எல்லாம் ஈசியாக முடிந்து விடும்!'' என்று 'ப்ராஜக்ட் பிளான்' வேறு போட்டுக் கொடுத்தார் சீனியர்!

**மா**லை ரம்யா, ராஜேஷிடம் பேசினாள். அவனுக்கு முதலில் அதிர்ச்சி. ஆனால், ஆண் ஈகோ மனசு முழுக்க ஆக்கிரமித்தது. 'உனக்கு நான் வேண்டாமென்றால், எனக்கு மட்டும் நீ எதற்கு?' அன்று இரவே இன்டெர்நெட்டில் தேடி தனக்கும் ஒரு வக்கீலைத் தயார் செய்தான்.

ரம்யா அமெரிக்காவுக்குப் புறப்பட்டாள்.

**ர**ம்யா இந்தியா திரும்பியதும், குடும்ப கோர்ட்டில் சில தடவைகள் சந்தித்துக் கொண்டபோதுகூட பேசிக் கொள்ளவில்லை. ஆயிற்று விவாகரத்து.

புறப்படும் சமயத்தில், ''ரம்யா! ஒரு நிமிஷம்! கடைசியா ஒரு காஃபி சாப்பிடலாமா?'' என்று கேட்டான் ராஜேஷ். ''ஓகே'' என்றாள் ரம்யா.

காஃபி மீண்டும் அவர்களை கோர்ட்டில் கொண்டு நிறுத்தியது!

**(அழைப்பு தொடரும்)**

எழுத்து வடிவம்: **எஸ். சந்திரமௌளி**

**குறிப்பு:** இத்தொடரில் இடம் பெற்றுள்ள மாடல் படத்துக்கும் தொடருக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை!

“நான் அழகாக இருப்பதாலேயே காமெடியாக நடிக்கக்கூடாது என்று அவசியமில்லை. நகைச்சுவை என்பது வெறும் உருவம் சார்ந்தது மட்டும் கிடையாது. அது உடல்மொழி. நகைச்சுவை நடிகர்கள் கறுப்பாக, அசிங்கமாக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. தமிழ் சினிமா இன்டஸ்ட்ரியில் விவேக், சந்தானம்... போன்ற



# “எப்பவும் ஹீரோ எம்.ஜி.ஆர். தான்!”

வர்கள் அழகானவர்களே. ஹாலிவுட்டில் 'சார்லி சாப்ளின்', 'லாரல் - ஹார்டி'... என ஹேண்ட்சம் காமெடியன்களுக்குப் பஞ்சமில்லை” என்று நகைச்சுவை நடிகர்களுக்குப் புது விளக்கம் அளிக்கும் ஸ்ரீநாத், தற்போது 'முத்திரை' படத்தை இயக்கி வருகிறார்.

**காமெடி கருத்தா...? வெறும் பொழுதுபோக்கா?**

''அன்றைய என்.எஸ்.கிருஷ்ணன், சந்திரபாபு போன்றவர்களை, திரையில் சொன்ன கருத்துக்களுக்காக மக்கள் தெய்வமாகப் பார்த்தார்கள். அன்று இருந்த ரசிகனுக்குக் கல்வியறிவும் குறைவு. சினிமாவும் இரும்புத்திரையால் மூடப் பட்ட விஷயமாக இருந்தது. இன்றைய சூழல் தலைகீழ். சினிமாவின் தயாரிப்பு தொழில் நுட்பங்களை டி.வி. சேனல்கள் தோலுரித்துக் காட்டிவிடுகின்றன. இன் றைய பாமர ரசிகன்கூட இது சூப்பர்; அது சொதப்பல் என்று விமர்சனம் செய்கிறான். இன்று காமெடியில் கருத்துச் சொல்வதைவிட, நாகரிக மான காமெடியே என் சாய்ஸ்.''



'முத்திரை' படத்தில்...

**நீங்கள் இயக்கும் 'முத்திரை' படம்?**

''மறைந்த இயக்குநர் ஜீவாவிடம் அசோஸியேட்டாகப் பணிபுரிந்தேன் என்று சொல்வதைவிட, அவரால் தட்டிக்கொடுக் கப்பட்டு வளர்ந்தேன். அவரோட ஆசீர் வாதத்தால் 'முத்திரை' படத்தை இயக்கு கிறேன். சிறிய சில்லறை திருட்டுக்களைச் செய்யும் இரண்டு திருடர்களின் வாழ்வில் நடக்கும் சுவாரஸ்யமான சம்பவங்கள்தான் கதைக்களம். வில்லனாகவும், கேரக்டர் ரோல்களையும் செய்துகொண்டிருந்த நிதின் சத்யாவுக்கும், டேனியல் பாலாஜிக் கும் 'முத்திரை'யில் ஹீரோவாக ப்ர மோஷன் கிடைத்திருக்கிறது. லட்சுமி ராயுடன், பாலிவுட் ஹீரோயின் மஞ்சரியும் அறிமுகமாகிறார்.''

**உங்கள் பார்வையில் சினிமா?**

''சினிமா இண்டஸ்ட்ரி கனவுத் தொழிற் சாலை. இங்கே தயாராகும் கனவுகள் ரசிகர்களிடத்தே வியாபாரம் ஆக வேண்டும். கமர்ஷியலாக வெற்றி பெறுபவர்கள்தான் இங்கே கவனிக் கப்படுகிறார்கள். ஏ,பி,சி, என ரசிகனைப் பிரித்துப் பார்ப்பதில் எனக்கு உடன்பாடில்லை. சென் னையில் ரசிக்கும் ஒரு விஷயம் தான் கன்னியாகுமரியிலும் ரசிக்கப்படுகிறது. சினிமா என்றாலே வெற்றியின் அம்சங் களை உள்ளடக்கியதாக இருக்கவேண்டும்.''

**உங்களைக் கவர்ந்த ஹீரோ?**

''அன்றும் இன்றும் எம்.ஜி.ஆர். தான். டெக்னாலஜி வளர்ந்த இந்தக் காலத்தில், நாம் செய்யும் பல திரை நுட் பங்களை, டெக்னாலஜி குறைவான அக் காலத்தில் அவர் முயன்று பார்த்திருக் கிறார். அவருடைய படங்களில் இடம் பெறும் பாடல்களின்படி ஒரு மனிதன் நடந்தால் அவன்தான் சிறந்த மனிதன். அத்தனை தத்துவார்த்தங்கள் நிறைந்தவை. நடிகனாக, மனிதனாக என் மனத்தில் பிரமிப்பை ஏற்படுத்துவது நம்ம வாத்தியார் தான்!''

– **ராகவ்குமார்**

# அமரர் கல்கி

ஸ்வாமிகளே! நானும் எவ்வளவோ சங்கீத வித்வான்களையும் அவர்களுடைய அங்க சேஷ்டைகளையும் பார்த்திருக் கிறேன். ஆனால், கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதரின் சகோதரர் ஸ்ரீமான் இராமலிங்கய்யரைப் போல் அங்கசேஷ்டை யின் சிகரத்தை அடைந்தவரை இதற்கு முன்



# வித்வான்களும்

பார்த்தது கிடையாது. இந்த அம்சத்தில் அவர் சாக்ஷாத் டைகர் வரதாச்சாரியாரைக் கூடத் தோற்கடித்து முதுகில் மண்காட்டக் கூடியவராயிருக்கிறார் என்றால், வேறு என்ன சொல்ல வேண்டும்?

முதன்முதலில், இவருடைய பாட்டை ரேடியோவில் கேட்டேன். இவரது சென்னை விஜயத்துக்கு முன்னதாகவே, நண்பர் ஈ. கிருஷ்ணையர் இவருடைய பெயரை வேண்டிய அளவு பிரபலப்படுத்தி வைத்திருந்தபடியால், அத்தகைய பாக்யம் எனக்குக் கிடைத்தது. அதில் இரண்டு விஷயங்கள் தெரிந்தன. முதலாவது, இந்த மனுஷ்யர் தாம் பாடும் ராகம் இன்னதென்று பிறர் கண்டுபிடிக்கமுடியாமல் ஒளித்து வைப்பதில் வெகு நிபுணர் என்பது. சர்வ சாதாரணமாய் எல்லாருக்கும் தெரியக்கூடிய தோடி ராகத்தைக்கூட வெகுவாக மறைத்து வைக்க முயன்றார். ஆனால், என்னிடம் இந்த வேலைத்தனம் எல்லாம் பலிக்குமா? எப்படியோ கண்டுபிடித்துவிட்டேன். இரண் டாவது, கீர்த்தனங்களின் விஷயத்திலும் அவர் இந்தச் சாமர்த்தியத்தைக் காண்பித்தார். அதாவது, அவர் பாடுவது என்ன கீர்த்தனம், அவர் உச்சரிப்பது என்ன வார்த்தைகள் என்பதை நம்முடைய பாட்டன்மார்களால் கூடக் கண்டுபிடிக்கமுடியாதென்றால், நம் மால் முடியாதென்று சொல்லவேண்டிய தில்லை. உதாரணமாக, அவருடைய கீர்த் தனம் ஒன்று பின்வருமாறு என் காதில் விழுந்தது:-

**பல்லவி**

*ஜஜஜஜ ஜஜஜஜ ஜா ஜா ஜா*

**அநுபல்லவி**

பபப பபப பபப பபப பபப

பூபூ பூபூ பூ பூ ப புப்புப் பூ

**சரணம்**

கொ கொ கொ கொ கொ கோகொக்கோ

சிசி சிசிசிசி சிச்சி

இவ்வளவு அபார வேலைத்திறமை வாய்ந்த வித்வானை நேரிலே பார்த்துவிட வேண்டும் என்று சங்கல்பம் உடனே ஏற் பட்டுவிட்டது. எனவே, சங்கீத வித்வத் சபையின் ஆதரவில் நடந்த இவருடைய கச்சேரிக்குச் சென்றேன். சென்றது வீண் போகவில்லை. ஸ்ரீமான் இராமலிங்கய்யரின் சங்கீதக் கச்சேரி பார்க்கத் தகுந்த ஒரு காட்சி தான்! உங்களுக்குச் சமீபத்தில் எங்கேயாவது நடந்தால், போய்ப் பார்க்கத் தவறாதீர்கள்.

இவருடைய கச்சேரி சம்பந்தமாக ஒரு

விஷயத்தில் நான் அபிப்பிராய பேதப்படுகிறேன். அதாவது அதை 'சங்கீதக் கச்சேரி' என்று சொல்வது மட்டும் பொருத்த மில்லையென்று நினைக்கிறேன். 'ஸ்வரங்களின் மகாயுத்தம்' என்று சொல்வது ஒருவேளை பொருத்த மாயிருக்கலாம். கச்சேரி ஆரம்பிப்பதற்கு முன்னால் பார்த்தால் மனுஷர் வைதிகக் குடுமியுடன் கதர்ச்சட்டை போட்டுக் கொண்டு பரமசாது வாய்க் காணப்படுகிறார். கச்சேரி ஆரம்பித்துவிட்டாலோ, அடே அப்பா! எத்தகைய மாறுதல்? அந்த ஸ்வரங்கள்தான் அவரிடம் என்ன பாடுபடுகின்றன! 'நில்லு அங்கேயே!' என்று இரண்டு கையாலும் தடுத்து நிறுத்துகிறார் ஒரு சமயம். 'வந்துடு இங்கே!' என்று இரு கைகளாலும் அணைத்துப் பிடித்துத் தலையோடு தலை முட்ட



தரையில் மட்டும் உட்கார்ந்திருந்தால், நிச்சயமாகப் பெரியகுழி ஒன்று தோண்டியிருப்பார்!

**ச**ங்கீத வித்வான்களிடம் அங்கசேஷ்டைகளை நான் அதிகமாய் ஆட்சேபிப்பதாக நேயர்கள் எண்ணக் கூடாது. மற்ற அம்சங்களில் சங்கீதம் சரியாயிருந்தால், அங்கசேஷ்டைகளை நாம் பொருட்படுத்த வேண்டியதேயில்லை. சில சமயங்களில், அங்க சேஷ்டைகள் சங்கீதத்துக்கு ஜீவ சக்தியளிக்கின்றன என்று கூடச் சொல்லலாம்.

நல்ல சங்கீதத்துக்கு முக்கியமாக இரண்டு அம்சங்கள் பொருந்தியிருக்க வேண்டுமென்பதை நேயர்கள் அறிவார்கள். ஒன்று, இன்னிசை; மற்றொன்று, பாவம் அதாவது ஸாஹித்யத்தின் பொருளுக்கேற்ற

# அங்க சேஷ்டைகளும்!

விடுகிறார் இன்னொரு சமயம். மற்றொரு தடவை பேயறைவது போல் ஒரே அறையாய் அறைகிறார். அப்புறம், ஸ்வரங்களை உரலில் போட்டு உலக்கை கொண்டு அவல் இடிப்பது போல் இடிக்கிறார். பின்னர், வில்லில் நாணேற்றிக் காதளவு இழுத்து வாங்கிப் பாணப் பிரயோகம் செய்கிறார். பிறகு கழுத்தைப் பிடித்து நெட்டுகிறார். கோபம் மிதமிஞ்சிப் போய்விட்டாலோ, 'இதோ வேருடன் கல்லி எறிந்து விடுகிறேன் பார்!' என்று சொல்லி இரண்டு கையையும் கீழே கொடுத்து வேரைப் பறிக்கிறார். நல்ல வேளையாக, மேடையில் உட்கார்ந்திருந்தாரோ, கானமந்திரத்தின் தரை பிழைத்ததோ!

உணர்ச்சியுடன் பாடுதல். இவ்விரண்டும் இராமலிங்கய்யரின் பாட்டில் கிடையாது.

ஸ்ரீமான் இராமலிங்கய்யர் சிறந்த தேசிய உணர்ச்சியுடையவர்; கதரையே வழக்கமாக அணிபவர்; தினசரிப் பத்திரிகைகளையும் வாரப் பத்திரிகைகளையும் விடாது வாசிப்பவர். இன்னும் அரிய குணங்களுடன் அவருடைய கச்சேரிகளில் கொஞ்சம் ஜீவனுள்ள சங்கீதத்துக்கும் இடங்கொடுத்தாரானால், அப்புறம் சங்கீத உலகில் அவருக்கிணை அவரே ஆகிவிடுவார் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

**- ஆனந்த விகடன் 20.5.1934**

**அன்றும் இன்றும் என்றும்**



# கல்கி




2009 ஜனவரி 18
ஸர்வதாரி தை 5
மலர் : 67
இதழ் : 25


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## திருமங்கலம் அமங்கலம்!

திருமங்கலம் இடைத்தேர்தலில் யாருக்கு வெற்றிகிட்டினாலும் அது தமிழகத்துக்கு நேர்ந்த அமங்கலத்தைச் சமன் செய்யாது. நமது மாநிலம், தேர்தல் கால ஒழுங்கின்மையில் முதலிடம் வகிப்பதாக பிரதம தேர்தல் ஆணையர் கூறியது நமக்குப் பெரும் தலைகுனிவு!

அமைச்சராக, ஆளுங்கட்சியின் பொருளாளராக, இளைஞரணித் தலைவராக, முதல்வரின் மகனாக, மூத்த அரசியல்வாதியாக - பல தகுதிகளில் ஜனநாயக மரபுகளைப் போற்றிப் பேண வேண்டியவர் மு.க. ஸ்டாலின். அவர் மீதே தேர்தல் முறைகேடு குற்றச்சாட்டு; வழக்கு பதிவு செய்ய, தேர்தல் கமிஷனே முன்வருகிறது! இது கேவலம் எனில், 'தாம் பணம் கொடுத்தது வோட்டுப் பெறுவதற்காக அல்ல; பெயரிடுவதற்கு வந்த குழந்தைக்குப் பரிசாக' என்று ஸ்டாலின் தந்த விளக்கம் அதனினும் கேவலம். இலவசங்கள் வினியோகம், நலத்திட்டங்கள் போன்றவற்றைத் தேர்தல் சமயத்தில் அரசு செயல்படுத்தலாகாது என்று தடை இருக்கிறபோது, பெயரிடலுக்குப் பரிசாக ஓர் அமைச்சர் ஐந்நூறு ரூபாய் வழங்குவதும் நெறி மீறல்தானே! ஸ்டாலின் தந்த விளக்கம், சட்டத்தின் பிடியிலிருந்து நழுவ அவருக்கு ஒரு வேளை உதவலாம்; ஆனால், அவர் மனத்தொடு வாய்மை மொழியவும் இல்லை; தவத்தொடு தானம் செய்யவும் இல்லை என்பது உறுதி. தெரிந்தே தவறு செய்திருந்த போதிலும்,




குற்றச்சாட்டு எழுந்த கணத்தில், ஸ்டாலின் அமைச்சர் பதவியை ராஜினாமா செய்திருந்தால், ஓரளவு நற்பெயராவது மிஞ்சியிருக்கும்.

அ.தி.மு.க.வினர்தான் வாக்காளர்களை விலைக்கு வாங்க முயன்று வருகிறார்கள் என்பது தி.மு.க.வினர் குற்றச்சாட்டு! இதற்கு வலிமை சேர்க்கும் வகையில், அக்கட்சிப் பிரமுகர் மீதும் ஒரு வழக்கு தொடரப்பட்டிருக்கிறது! வன்முறை வேறு திருமங்கலத்தில் தாண்டவ மாடியிருக்கிறது. சகிப்புத் தன்மை முற்றிலும் இழந்து, எதிர்க்கட்சி என்றாலே விரோதியாகக் கருதி பகைமை பாராட்டுவது என்று ஆகிவிட்டது! எதிர் அணியின் பலவீனங்களைத் தாக்குவது சுலபமாக இருப்பதால், அதுவே பிரசார நடைமுறையாகிவிட்டது. வார்த்தைகளின் வன்முறை செயலிலும் வெகு சீக்கிரம் ஊடுருவுகிறது. பிரசாரத்தில் ஈடுபட்ட பிரேமலதா விஜயகாந்த்தைப் பகிரங்கமாகத் தாக்கத் துணிந்துள்ளனர் தி.மு.க.வினர்.

இதனாலெல்லாம் ஜனநாயகமோ ஜனநாயக மரபுகளோ அழிந்துபோய்விடவில்லை. அவை உயிர்த்துடிப்புடன்தான் இருக்கின்றன. அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டிய தமிழகத் தலைவர்கள்தான் கௌரவமிழந்து நடந்துகொண்டு, தமிழகத்தின் கௌரவத்தையும் சிதைத்திருக்கிறார்கள். அவர்களைத் தலைவர்களாக ஏற்று வழிபட்டு, வாக்கும் அளிக்கும் மக்களின் மதிப்பும் தாழ்ந்து போகிறது. மரபுகளை மதிக்காத தலைவர்களை ஊக்குவிப்பதுடன், விலைமதிக்க முடியாத வாக்குரிமையை அற்பக் காசுக்கு விற்கவும் செய்த பிறகு, 'ஜனநாயகம் செத்துவிட்டது!' என்று புலம்புவது போலித்தனம்.

நாடாளுமன்றத் தேர்தல்கள் வரும் முன்னராவது மக்கள் விழிப்புணர்வு கொள்ள வேண்டும். நல்ல மரபுகளை உதாசீனப்படுத்தும் தலைவர்களை நிராகரித்து, ஜனநாயகத்தைப் பலப்படுத்த வேண்டும். இல்லையென்றால், யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப்போட்டுக் கொண்டதுபோல் ஆகிவிடும். ●

# அட்டைப்பட ஹீரோ!

தீ.ரகு



**அ**ந்தப் பிரபல வார இதழின் அட்டைப் படத்தில் வெளியாகியிருந்த அழகிய வாலிபனின் புகைப்படத்தைப் பார்த்ததும் விஷ்ணுவுக்குச் சந்தோஷம் பீறிட்டது. அவன் மனத்துக்குள் கற்பனை பண்ணி வைத்திருந்த வாலிபனோடு இந்த அழகிய இளைஞன் ஒத்துப் போனான்.

''ஹலோ! 'பௌர்ணமி நிலவு' ஆஃபிஸா?''

''ஆமா!''

''புதுசா நான் எடுக்கப் போற படத்துக்கு ஹீரோவைத் தேடி அலைஞ்சிக்கிட்டிருக்கேன். அந்த ஹீரோ அப்படியே அச்சு அசலாக உங்க அட்டைப் படத்தில் இருக்கார். அவரோட அட்ரஸ் தர்றீங்களா?''

''குறிச்சுக்கறீங்களா?''

சொல்லச்சொல்லக் குறித்துக் கொண்டார்.

விஷ்ணு அதிர்ஷ்டத்துக்கு அடுத்தாற்போல் நம்புவது படத்தின் கதாநாயகன்.

புதுப்படத்துக்குத் தன் ஹீரோவை ஒரு மாதிரியாய்க் கற்பனை பண்ணி வைத்திருந்தார். இப்போதுள்ள முகங்கள் ஒன்றும் ஒத்துவரவில்லை - சம்பளம் உட்பட!

புதுமுகத்தைத் தேடித்தேடி அலுத்துப் போனது. பௌர்ணமி நிலவு, பத்திரிகையின் அட்டைப்படத்தில் அந்தப் பையன் சிரித்துக்கொண்டிருக்கிறான்.

பெயர் ஸ்ரீதரன் என்று போட்டிருந்தது.

**'க்'**ரீச்' என்று பிரேக் போட்டு காரை நிறுத்தினார் விஷ்ணு. இந்த வீடுதான்.

பரந்த புல்வெளி. அந்தப் புல்வெளியின் மத்தியில் டீபாய், சேர்கள் போட்டு ஒரே ஒருவர் அமர்ந்திருந்தார்.

''வணக்கம்!''

''யார் நீங்க?''

''என் பேர் விஷ்ணு. பிலிம் புரொடியூஸர் அண்ட் டைரக்டர்!''

''என்ன விஷயம்?''

''இங்கே ஸ்ரீதர் இருக்காரா?''

''ஆமா!''

''அவரை என் படத்தில் ஹீரோவாக அறிமுகப்படுத்த விரும்பறேன். அவரைப் பார்க்கணுமே.''

ஜோக் கேட்ட மாதிரி விழுந்து விழுந்து சிரித்தார்.

''ஏன் சிரிக்கறீங்க?''

''ஒண்ணுமில்லை... அந்த ஸ்ரீதரனுக்கு வயது எழுபது!''

''என்ன? நிஜமாவா? இந்த வயசிலுமா இப்படி ஒரு அழகு...?''

''அது என் தாத்தா. 22 வயசுல எடுத்துக்கிட்ட ஃபோட்டோ.''

விஷ்ணுவுக்குச் சப்பென்று இருந்தது.

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!



ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் **தீமை** உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திர முண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் **மறையகம் பாபா.** உடனே அணுகவேண்டிய முகவரி:

அருள்

## மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ.3, அப்துல் ரசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை, சென்னை - 600 015.

☎ : 2435 1190, 2433 2047. செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சனை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சனைகளை எழுதி, ரூ. 10 (அ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.






Keep Smiling
Keep Shining

Wish you
a Great Year Ahead

# 2009

PROMOTERS OF GOVT. APPROVED PLOTS

**BLB ESTATES PRIVATE LIMITED**

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, T.Nagar, Chennai-600017.

Ph: 28345104/05/06 E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

**INVESTING IN VALUES**

“இந்த நிறுவனத்தில் மானேஜிங் டைரக்டராக இருந்தவர், அந்த நிறுவனத்துக்குத் தாவிவிட்டாராமே; இந்த சி.இ.ஓ.வுக்கு என்ன ஆச்சு; அங்கே போய்ச் சேர்ந்துட்டார்'' என்று பெரிய பொறுப்புகளில் இருப்பவர்கள் தாவுகிற செய்திகளை நாம் அடிக்கடி பேப்பர்களில் படிக்கிறோம்.இது எப்படிச் சாத்தியமாகிறது? என்று கேட்டால் விஷயம் தெரிந்தவர்கள் கைகாட்டுவது ஸர்ச் கன்ஸல்டன்ட்களைத்தான் (search consultant). பல மனிதவள நிறுவனங்களில் ஸர்ச் கன்ஸல்டன்ட்கள் இருக்கிறார்கள். இவர்களது பணி மிக ரகசியமானது. காரியத்தைச் செய்து முடித்தால் இவர்களுக்குக் கிடைக்கும் தொகை பல லட்சங்கள்!

டாக்டர் சுவாமிநாதன்

'அந்த சி.இ.ஓ.வை நம்ம நிறுவனத்துக்கு இழுத்தால் நல்லது' என்று போட்டி நிறுவனம் முடிவெடுத்தபின், அந்த வேலை ஸர்ச் கன்ஸல்டன்ட்வசம் ஒப்படைக்கப்படுகிறது. பிறகு குறிவைக்கப்படும் நபரின் ஹாபி முதல் அவர் எந்த க்ளப்பில் மெம்பர் என்பது வரை தகவல்கள் திரட்டப்படும். துப்பறியும் நிபுணர் வேலைதான்! அதன் பிறகே கன்சல்டன்ட் நேரடியான தொடர்பில் இறங்குகிறார். சந்திப்புகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன; சம்பளம் தீர்மானிக்கப்படுகிறது. ஊக்கத் தொகையாகப் பல லட்சங்கள். இரண்டு வருடங்கள் வேலை செய்வதாக ஒப்புக்கொண்டால், அதற்குத் தனி ஊக்கத் தொகை. கிட்டத்தட்ட ஆறு மாதம்கூட இந்த முயற்சி நீடிக்கும். அப்புறம் ஒருநாள் காலை ஃபைனான்ஷியல் தினசரிகள், எட்டு காலத்தில் 'இந்த சி.இ.ஓ. இந்த நிறுவனத்தில் சேருகிறார்' என்று செய்தி போட்டவுடன் பரபரப்பு பற்றிக்கொள்கிறது.

இத்தகைய பணிகளில் ஈடுபடும் ஸர்ச் கன்ஸல்டன்ட் மனிதவளத் துறையில் பல்லாண்டுகள் கொட்டை போட்ட நிபுணராக இருப்பார். அதனால் அத்தகைய ஒருவர் பெரிய எம்.டி. மற்றும் சி.இ.ஓ.க்களுடன் சரிக்குச்சரி அமர்ந்து பேச முடியும். அத்தகைய ஒருவர் டாக்டர் சுவாமிநாதன். விவேகானந்தாவிலும், லயோலாவிலும் லெக்சரராகப் பணியைத் துவங்கிய சுவாமிநாதனுக்கு, ஸ்டேட் வங்கியில் வேலை கிடைத்தது. லண்டனில் போஸ்ட் செய்யப்பட்டார். அங்கே போய் எம்.பி.ஏ. முடித்தார். பின்பு இந்தியாவுக்குத் திரும்பிய அவரை, 'ஊழியர்கள் பயிற்சிக் கல்லூரி'யில் பணியாற்றச் சொன்னார்கள். அதுதான் அவருக்குத் திருப்பு




# சகலகலா ஸர்ச் கன்சல்டன்ட்ஸ்!



முனை. வங்கி வேலை தொடர்பான பயிற்சிகள் தவிர, 'நடத்தை விஞ்ஞானம்' என்று ஊழியர்களுக்கு கற்றுத் தருவதில் இறங்கினார். ஆறு வருடம் அங்கு பணிபுரிந்தபின், ரானே குழுமத்தில் மனிதவளத் துறையின் தலைமை நிர்வாகியாகச் சேர்ந்துவிட்டார். ஊழியர்கள் வளர்ச்சி நிறுவனத்தை அங்கே ஏற்படுத்தினார். பல சீனியர் ஊழியர்கள் தொழில்நுட்பத்தில் திறமையாளர்களாக இருந்தாலும் வேலையில் தவறிப் போவதைக் கண்ட சுவாமிநாதன், அவர்களுக்கு மனரீதியான பயிற்சிகள் கொடுத்துத் தயார்ப்படுத்தினார். மனிதவளத்துறையில் மிகச் சிறந்த நிபுணர்களில் ஒருவரான சுவாமிநாதனை, ஜி.எம்.ஆர். நிறுவனம் தனது நிர்வாக கன்ஸல்டன்ட்டாக அழைத்துக்கொண்டது. விமான நிலையங்கள், துறைமுகங்கள், தேசிய நெடுஞ்சாலைகள், அனல்மின் நிலையங்கள் என்று கட்டுமானங்களை உருவாக்கும் மிகப் பிரம்மாண்டமான நிறுவனமாக உருவாகியிருக்கிறது ஜி.எம்.ஆர். ''மனிதவளத் துறையில் நிபுணராவதற்கு எம்.பி.ஏ. தேவையில்லை. மற்றவர்களை மதித்து நடத்தல், நம்பிக்கையைப் பெறுதல் போன்ற குணங்களுடன், ஊழியர்களின் குடும்ப மற்றும் சமுதாயத் தேவைகளை அறிந்து விடிவு காணுதல்... போதும்'' என்கிறார் சுவாமிநாதன்.

ஒரு காலத்தில் பெர்ஸனல் துறை என்று அழைக்கப்பட்ட மனிதவளத்துறை, இன்று நிறுவனத்தின் வளர்ச்சிக்கு யுக்திகள் வகுக்கும் துறையாக மாறிவிட்டது. இதன் இன்னொரு முகம் 'சேஞ்ச் ஏஜெண்ட்' (change agent). ஒரு நிறுவனம் இன்னொரு நிறுவனத்தை 'விழுங்கும் போது' பாதிக்கப்படும் நிறுவனத்தில் பணி

## பாண்டி's BLOG

**2008** இறுதியில் 2009 துவக்கத்தில் ஏற்பட்டிருக்கும் பொருளாதார உருக்கம் மனிதவள மேலாளர்களின் திறமைக்கு ஒரு சவால்! அவர்கள் தங்கள் மூளைக்கு ஓவர்டைம் கொடுத்து வேலை செய்ய வேண்டும். நிறுவனங்கள் தங்களை உறுதிப்படுத்துதல், வளர்ச்சிப் பாதை ஆகியவற்றில் பார்வை பதிக்கும். அதே நேரத்தில் திறமையுள்ள ஆட்களைத் தேர்ந்தெடுப்பதில் காட்டும் ஆர்வம், கைவசம் இருக்கும் திறமையாளர்களை இழந்துவிடக்கூடாது என்பதில் எதிரொலிக்கும். எனவே மனிதவள மேலாளர்கள், இந்த அணுகுமுறையில் தங்கள் யுக்திகளை வகுப்பார்கள். சில மனிதவள பணிகள் அவுட் ஸோர்ஸிங் செய்யப்படும். உதாரணமாக, சம்பளப் பட்டியல் போடுவது, ஊழியர்களின் தனிப்பட்ட பிரச்னைகளைக் கவனிப்பது போன்ற பணிகள் வெளியில் கொடுக்கப்படலாம்.



'ஃப்ளெக்ஸிபில்' வேலை நேரம், ஊழியர்களிடையே கூடுதல் வேலைகளைப் பங்கிட்டுக்கொள்ளுதல் போன்றவை, இப்போது மேற்கத்திய நாடுகளில் கையாளப்படுகின்றன. இவற்றை இந்திய நிறுவனங்களும் மேற்கொள்ளும். தவிர வீட்டிலிருந்தபடி தங்கள் பங்களிப்பைச் செய்ய ஊழியர்கள் விரும்பினால் அதுவும் அனுமதிக்கப்படும்.

பெரிய நிறுவனங்கள், ஒன்றுக்கொன்று இணைப்பு விழாக்கள் நடத்திக்கொண்டிருக்கும் இந்தக் கட்டத்தில், போட்டி என்பது தாரக மந்திரமாக இருக்கிறது. எனவே ஊழியர்களுக்குக் கணிசமான சம்பளம் கொடுப்பது மட்டுமல்லாமல், பிற சலுகைகளையும் கொடுத்துத் தக்கவைத்துக் கொள்வதில், மனிதவள மேலாளர்கள் கடுமையாக உழைக்க வேண்டும். இது தவிர எதிர்பார்த்த திறமை காட்டாத ஊழியர்களின் செயல்பாட்டைக் கணித்து, அவர்களுக்கு 'டாடா' காண்பிக்கவும் வேண்டும்!

புரியும் ஊழியர்களுக்குப் பல பயங்கள் ஏற்படுவதுண்டு. அவர்களின் சந்தேகங்களுக்குப் பதில் கொடுப்பவர்கள் மனிதவள நிபுணர்கள். 'இதுவரை வெள்ளிக்கிழமை ஜீன்ஸ் போன்ற கேஷுவல் ஆடை அனுமதிக்கப்பட்டது. இனி அது கிடையாது' என்று சொல்பவரும் இந்த நிபுணர்தான்! உலக நிறுவனங்களின் வேலை மற்றும் நிர்வாகக் கலாசாரத்தை நமது நிறுவனங்களும் அமுல்படுத்துவதால்தான் இந்த மாறுதல்.

**ம**னிதவளத் துறையில் பதினாறு துணைத் தலைப்புகள் இருக்கின்றன. சாதாரணப் பட்டதாரி என்றால் இந்தத் துறையில் துவக்க நிலையில் வேலையில் நுழையும்போது, பத்தாயிரம் சம்பளம் நிச்சயம். ஆனால் மேலே செல்ல வேண்டுமானால் திறமையை வளர்த்துக்கொண்டால் மட்டும் போதாது. எம்.பி.ஏ. அல்லது எம்.எஸ்.டபிள்யூ.வில் மனிதவளம் படித்திருக்க வேண்டும். இந்தப் படிப்பு முடித்தால் நிறுவனங்களில் மட்டுமல்லாமல், எங்கள் நிறுவனத்தைப் போன்ற, 2500 கன்ஸல்டன்ஸிகளில் வேலை கிடைக்கும் வாய்ப்பு உண்டு.

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

# புத்தக விமர்சனம்






**அமெரிக்க ஜனாதிபதிகள் - டாக்டர் ஆர். நடராஜன், மணியம் பதிப்பகம், குறிஞ்சிப்பாடி. விலை ரூ.75/-**

அமெரிக்கத் தூதரகத்தில் அரசியல் ஆலோசகராகப் பணியாற்றிய நூலாசிரியர், இதுவரை பொறுப்பு வகித்த அமெரிக்க ஜனாதிபதிகள் மற்றும் முதல் பெண்மணிகள் குறித்து எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுப்பு. 43 அமெரிக்க ஜனாதிபதிகளின் சுருக்கமான வாழ்க்கை வரலாறாகவே கட்டுரைகள் அமைந்துள்ளன. எளிய நகைச்சுவை கலந்த மொழிநடை ஈர்க்கிறது.

**ஸ்ரீஹனுமானின் அற்புத ப்ரபாவங்கள் - 'நவரத்னமாலா' எம்.கே.வெங்கட்ராமன், லிப்கோ பப்ளிஷர்ஸ், தி.நகர், சென்னை - 17. விலை ரூ.30/-**

வால்மீகி ராமாயணம் முதலாக பலர் இயற்றிய ராமாயணங்களிலிருந்தும் ஹனுமானைப் பற்றிய செய்திகள் சுவையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. சுந்தர காண்டத்தின் சுருக்கமும் நூலில் இடம் பெற்றுள்ளது. கதை வடிவிலான நூலுக்கு, இடம்பெற்றுள்ள படங்கள் அழகு செய்கின்றன.

**பிராணாயாமக் கலை - ஸ்வாமி, விகடன் பிரசுரம், அண்ணாசாலை, சென்னை - 2. விலை ரூ.55/-**

இன்றைய அவசர யுகத்தில் மனத்தை அமைதிப்படுத்தவும், உடலைச் சீர்படுத்தவும் உதவும் வகையில் பிராணாயாமத்துக்கான செய்முறைகள் எளிமையாக விளக்கப்பட்டுள்ளன. எளிய நடையில், விளக்கப் படங்களுடன் பதினான்கு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. சுவாசத்தைச் சீர் செய்வதன் மூலம் உடலையும் உள்ளத்தையும் நேர் செய்ய இயலும் எனக் கூறுகிறது இந்நூல்.

## புழுங்கும் காற்று

**சயனக் கிளைகளில் கீழிறங்கும் வனம்... - ரா.நாகப்பன், கீதாஞ்சலி கிரியேஷன்ஸ், அரும்பாக்கம், சென்னை - 96. விலை ரூ.40/-**

பல்வேறு உணர்வுகளில், தளங்களில் நகரும் கவிதைகளின் தொகுப்பு. இடையிடையே எதிர்ப்படும் தலைப்பில்லா கவிதைகள், வாசிப்பைத் திடீரென்று திசை திருப்புகின்றன. 'கடைசியாகச் சொல்லிச் சென்றது காற்று புழுக்கமாய் இருப்பதாக...' என்பது போன்ற மூன்று வரி கவிதைகளுக்கு ஒரு வரித் தலைப்பு தேவையில்லைதான். தெரியாத பாதைகளில் திட்டமிடா பயணத்தில், சாத்தியமாகக் கூடிய அதிர்ச்சிகளும், ஆச்சரியங்களுமான அனுபவம் இந்நூல்.

**- நேயமுகில்**




பட்ட பத்துக்கும் மேற்பட்ட ஓப்பனர்களில் சோப்ரா முக்கியமானவர். முதல் வாய்ப்பைச் சரியாகப் பயன்படுத்தாததால் அதன் பின்பு உயிரைக் கொடுத்து ஆடினார். சென்ற வருடம் ரஞ்சிப் போட்டிகளில் சோப்ரா அடித்ததே அதிகபட்ச ரன். ஷேவாக், கம்பீருக்குக் காயம் ஏற்பட்டால்கூட போதும். கிடைக்கிற ஒரு வாய்ப்பையும் தங்கமாக மாற்றிக்காட்டுவேன் என்கிற நம்பிக்கையோடு ஒவ்வொருமுறையும் ரஞ்சிப் போட்டிகளில் கலந்து

# தடைகளைத்

கொண்டார். ஆனால் அவர் பி.சி.சி.ஐ.-க்கு எந்தளவுக்கு வேண்டப்பட்டவர் என்று படிப்படியாகத் தெரியவந்தது. இந்திய அணியில் மட்டுமல்ல, இந்தியா 'ஏ' அணியிலும் சோப்ராவை சேர்த்துக் கொள்ள கிரிக்கெட் வாரியம் மறுத்தது. இதுதவிர புதிதாக பி.சி.சி.ஐ. யில் அறிமுகப்படுத்தப்பட்ட கிரேட் பிரிவிலும் சோப்ராவின் பெயர் நீக்கப்பட்டது. 'நீ எத்தனை ரன்கள் வேண்டுமானாலும் உன் இஷ்டத்துக்குக் குவித்துக்கொள். இனி நீ எங்களுக்குத் தேவையில்லை' என்கிற மனநிலையில் இருந்து வருகிறது பி.சி.சி.ஐ. இதைக் கண்டித்து சோப்ரா கட்டுரை ஒன்றை வெளியிட்டார். பத்ரிக்கு நேர்ந்த அநியாயம் எதுவும் இன்றுவரை சோப்ராவுக்கு

**நூ**று கோடி பேர் இருக்கிற ஒரு நாட்டில் பதினொரு பேருக்கு மட்டும் வாய்ப்பு வழங்கப்படும்போது, வாய்ப்பு தவறிப்போன ஆயிரக்கணக்கான வீரர்களின் மனநிலை பெரும்பாலும் காற்றில் மறைந்த பட்டமாகிவிடுகிறது. ஆனால் இன்றைய கிரிக்கெட் வீரர்கள் துணிச்சலாக அதிகார மையத்துக்கு எதிரான கருத்துகளை முன்வைக்கத் தயங்குவதில்லை. எனக்குப் பதிலாக திவாரியைத் தேர்ந்தெடுத்துள்ளீர்களே, என்னிடம் என்ன குறையைக் கண்டீர்கள் என்று பத்ரிநாத் ஆவேசப்பட்ட சில நாட்களில், இந்திய அணி சார்பாக ஆட அவர் ஸ்ரீலங்கா பறந்து சென்றார்.

ஆகாஷ் சோப்ராவை யாவரும் அறிவீர்கள். ஷேவாக்-கம்பீர் இணைக்கு முன்பு பரிசோதிக்கப்

நிகழவில்லை.

டென்னிஸ் மற்றும் இதர விளையாட்டுக்கள் போல தன்னிச்சையாக ஒரு கிரிக்கெட் வீரரால் இயங்க முடியாது. மாநில அணியில் விளையாட வேண்டும் என்றால் முதலில் மாநிலத் தேர்வுக் குழுவுக்கு இவரது ஸ்கோர் கண்ணில் பட்டு, அதன் வழியாக ஒரு பிம்பம் உருவாகியிருக்க வேண்டும். அப்படியே மாநிலத்துக் காகத் தேர்வாகி, பிரமாதமாக ஆடினாலும் கூரை பிளந்து விடாது. பாரம்பரியமான ரஞ்சி போட்டிகளில் அதிக ரன்களை எடுத்தவர் என்கிற பெருமை மும்பை வீரர் முகம்தாருக்கு உண்டு. முதல் போட்டியிலேயே 260 ரன்கள் அடித்தவர் என்கிற உலக சாதனைக் கேடயம் வேறு. ரவிசாஸ்திரி, தெண்டுல்கர், காம்ப்ளி, ரோஹித்

# தாண்டும் வீரர்கள்

ஷர்மா என்று இவரோடு ஆடிய அத்தனை பேரும் இந்திய அணிக்காக ஆடியிருக்கிறார்கள். ஆனால் இன்றுவரை பி.சி.சி.ஐ.யின் கடைக்கண் பார்வை முகம்தார் மீது விழவில்லை.

தினம் ஒரு புதுத்திறமை முளைக்கிற இந்த விளையாட்டில், எல்லோரையும் சாந்தப்படுத்திவிட முடியாது. இருந்தும் இதுபோன்ற அபாக்கியசாலிகள் எதனால் தொடர்ந்து உள்ளூர் போட்டிகளில் ஆடி வருகிறார்கள்? இனியும் பி.சி.சி.ஐ.யின் கதவு திறக்கப்போவதில்லை என்கிற பட்சத்தில் எது இவர்களை இயக்குகிறது?

காதல். கிரிக்கெட் மீதான வெறித்தனமான காதல். இந்திய அணியில் விளையாடினால் பெருமை. அந்த வாய்ப்பு மறுக்கப்பட்டால் அதற்காக பேட்டைத் தூக்கிப் பரணில் போடமுடியுமா என்ன? காலையில் எழுந்தவுடனே பயிற்சிக்குச் செல்லாவிட்டால் கால்கள் நடுங்க ஆரம்பித்துவிடும். கிரிக்கெட் பக்கமே தலைவைத்துப் படுக்காமல் 9 டூ 6 வேலையை இவர்களால் ஜென்மத்துக்கும் செய்ய முடியாது. தொடர்ந்து ரஞ்சி ஆட்டங்களில் ஆடி, மாநிலத் துக்காக ஆடுகிற சிறு சுகத்தை யாவது அனுபவிப்பார்கள். வயது முதிர்ந்துவிட்டால் பயிற்சி நிலையம் தொடங்கு வார்கள் அல்லது தொகுப் பாளர் ஆகிவிடுவார்கள். இல்லாவிட்டால் தேர்வுக் குழுவில் இணைவார்கள். கிரிக்கெட் நிர்வாகத்தோடு தங்களைப் பிணைத்துக் கொள்வார்கள். செய்கிற தொழில் மீது காதல் கொண்டவர்களுக்கு எத்தனை காயங்கள் ஏற்பட்டாலும் அவை அவமானம் ஆகா. ●



# அக்கம் பக்கம்



* உமர் அப்துல்லா



* ராகுல் காந்தி

அப்பாவா? மகனா? என்ற பதவிப் பந்தயத்தில் மகன் உமர் அப்துல்லா, தம் அப்பாவான ஃபரூக் அப்துல்லாவை ஜெயித்துவிட்டார். முதலமைச்சர் பதவியை மகனுக்கு விட்டுத் தருவதில் அப்துல்லாவுக்குப் பூரண சம்மதமில்லையாம். ஆனால், முதலமைச்சர் வேட்பாளர் உமர் அப்துல்லா என்றால்தான் ஆதரிப்போம் என்று காங்கிரஸ் கட் அண்ட் ரைட்டாகச் சொல்லிவிட்டதாம். பிரதமர் மன்மோகன் சிங்குக்குக்கூட இதில் கருத்து வேறுபாடு இருந்ததாம். ''தேசிய மாநாட்டுக் கட்சியை ஆதரிப்பதைவிட, முஃப்தி முகமது சையீதின் பி.டி.பி.யை ஆதரிப்பது நல்லது. இல்லையென்றால் முஃப்தி முகமதுவும், அவர் மகள் மெகபூபாவும் பிரிவினை அமைப்புகளை ஆதரிக்கும் ஆபத்து உள்ளது'' என்பது அவர் தரப்பு வாதமாம். ஆனால் ராகுல்காந்தியும், சச்சின் பைலட்டும் உமர் அப்துல்லாவை முதலமைச்சராக்குவதில் முனைப்புடன் இருந்தார்கள். சச்சின் பைலட், உமர் அப்துல்லாவின் மச்சான் என்பது கொசுறு தகவல்!

அந்தக் காலத்தில் காஷ்மீர் மகாராஜா ஹரி சிங் வசித்த 66 பிரமாண்டமான அறைகள் கொண்ட மாளிகையான 'ஹரிநிவாஸ்' கடந்த காங்கிரஸ் கூட்டணி ஆட்சிக் காலத்தில், பதினொரு கோடி ரூபாயில் புதுப்பிக்கப்பட்டு, மாநில முதலமைச்சரது அதிகாரபூர்வமான இல்லமாக இருந்தது. புதிய முதலமைச்சர் உமர் அப்துல்லா, ''நான், என் மனைவி, இரண்டு குழந்தைகள் மட்டுமே கொண்ட மிகச் சிறிய குடும்பம் என்னுடையது. தற்போது நான் வசிக்கும் குப்கர் பகுதியில் உள்ள மூன்று படுக்கை அறைகள் கொண்ட வீடே எனக்குப்

# அப்பாவுக்கு 'நோ...' மகனுக்கு 'யெஸ்..!'

போதுமானது. பாதுகாப்புப் பிரச்னை எதுவும் இல்லையென்றால் நான் இங்கேயே வசிக்கிறேன்'' என்று சொல்லி இருக்கிறார்.

ஜம்மு-காஷ்மீரின் புதிய சட்டசபை அம்மாநிலத்தின் அரசியல் வாரிசுகளின் அணிவகுப்பாக இருக்கப்போகிறது. உமர் அப்துல்லா, மெகபூபா மற்றும் முன்னாள் மந்திரிகளின் வாரிசுகளான இர்ஃபான் ஷா, சஜாத் கிச்லூ, மெயின் அல்டாஃப், ஜாவீது முஸ்தஃபா, சகினா இடு என்று மொத்தம் பதினொரு வாரிசுகள் தேர்தலில் போட்டியிட்டு ஜெயித்து சட்ட சபைக்கு வந்திருக்கிறார்கள். தவிர அப்பா-மகன், அப்பா- மகள் காம்பினேஷனும் உண்டு.

தீவிரவாதிகளுக்கும், பாதுகாப்புப் படையினருக்கும் இடையில் ஜம்மு-காஷ்மீரின் பல்வேறு பகுதிகளிலும் தினமும் மோதல் நிகழ்ந்து வரும் சூழ்நிலையில், அவை பற்றி செய்தி சேகரிக்க ஏராளமான பத்திரிகையாளர்களும், புகைப்படக்காரர்களும், வீடியோ கேமராமேன்களும் மோதல் நிகழும் இடங்களுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. அப்படிச் செல்லும்போது அவர்கள் ராணுவத்தினரால் தாக்கப்படுகிறார்கள் என்ற புகார் சமீபகாலமாக அடிக்கடி எழுகிறது. ''நாங்கள் கடமையாற்றும்போது உயிருக்கு ஆபத்து நிலவுகிறது; ராணுவத்தினர் மீடியாக்காரர்களைத் தாக்குவதை உடனடியாக நிறுத்த வேண்டும்'' என்று கோரி, பத்திரிகையாளர்கள் அமைப்பு ஸ்ரீநகரில் அண்மையில் ஓர் ஊர்வலம் நடத்தியது. இது சம்பந்தமாக புதிய முதல்வரைச் சந்தித்துப் புகார் கொடுக்கப் போகிறார்களாம்.

* குலாம் நபி ஆசாத்



* சச்சின் பைலட்



மாநில மந்திரி சபையில் காங்கிரஸ் பங்கேற்பது கேள்விக்குறியாக இருக்கும் நிலையில், கட்சியில் தனக்கு ஏதாவது முக்கியப் பதவி கிடைக்குமா என்று தீவிரமாக முயற்சிகள் செய்கிறாராம் காஷ்மீர் முன்னாள் முதலமைச்சர் குலாம் நபி ஆசாத். தேர்தல் பணிகளை வியூகங்கள் வகுத்து, சுறுசுறுப்பாகச் செய்பவர் என்ற நல்ல பெயர் ஆசாதுக்கு இருப்பதாலும், பாராளுமன்றத் தேர்தல் வரவிருப்பதாலும், ஏதாவது ஒரு பெரிய மாநிலத்தில் தேர்தல் பொறுப்பாளராவது அவரது டார்கெட்டாம்.

**- கௌதம்ராம்**


★ புனிதா த்ரிக்கா

"ஷில்பா ஷெட்டி, பிக்பிரதர் ஷோவில் என்னுடைய டிசை னில் அமைந்த நகை களைப் போட்டுக் கொண்டார். அதில் ஜெயித் தார். அது எனக்கு ரொம்பப் பெரு மையாக இருந்தது. ராணி முகர்ஜி, ஒவ்வொரு பார்ட்டி யிலும் அநேகமாக நான் டிஸைன் செய்த நகைகளை அணிகிறார். ஸோ ஹேப்பி. கேத்ரீனா, கஷ்மிதா... என பலருக்கும் என்னுடைய ஜுவெல்லரி ஸ்டைல் பிடித் திருக்கிறது..." சொல்பவர் பிரபல ஜுவெல்லரி டிஸைனர் புனிதா த்ரிக்கா!

"சினிமாவில் ஹீரோயின்களுக்கு ட்ரஸ், ஜுவெல்லரி என காரெக்டர்களுக்குத் தகுந்தாற்போல் ஒருவரே டிஸைன் செய் வார். முதன்முதலில் தனியாக 'ஜுவெல்லரி டிஸைன்' என்று டைட்டில் போடப் பட்டது எனக்குத்தான்.

ஃபெரோகான் படமான 'ஜான்நஹீன்'தான் எனக்கு அறிமுகம். செலினா ஜெட்லி நான் டிஸைன் செய்த நகைகளைத்தான் படம் முழுக்க போட்டுக் கொண்டார். சினிமா ஊத்திக்கிச்சு. புனிதா வின் டிஸைன் பத்திக்கிச்சு" என்கிறார். ஏர்ஹோஸ்டஸாக இந்தியன் ஏர்லைன்ஸில் பல வருடங்கள் வேலை பார்த்த புனிதா வுக்கு அந்த வேலை அலுத்துப் போகவே வேலையை விட்டு விட்டார்.

"ஒருமுறை மேரிலூயிஸ் என்ற ஜுவெல்லரி டிஸைனரிடம் சில நாட்கள் இருந்து கற்றுக்கொண்டேன். பிறகு நானே பல மாதங்கள் பிராக்டீஸ் செய்து தேர்ச்சி பெற்றேன். பல எக்ஸிபிஷன்களில் பங்கு பெற்றேன். ஸ்வரோஸ்கி கிறிஸ்டல் பெயர் பெற்ற கம்பெனி... வெளிநாட்டில் அவர் களுடைய எக்ஸிபிஷனிலும் கலந்து கொண்ட ஒரே இந்திய டிஸைனர் நான் தான். இன்றளவும் நான் எந்த உதவி யாளரும் வைத்துக்கொள்ளவில்லை. இது மெஷின்மேட் அல்ல. நானே கைகளால் பல மணி நேரங்கள் செலவிட்டுச் செய் கிறேன். என்னை டிப்ரஷனிலிருந்து வெளிக்கொண்டு வந்த அருமருந்து ஜுவெல்லரி டிஸைனிங்..." என்கிறார் புனிதா.

புனிதாவின் டிஸைனில் கிறிஸ்டல் நகைகள் 2500 ரூபாயிலிருந்து ஒண்ணரை லட்சம் வரை கிடைக்கிறது. தில்லியில் ஷோரூம் வைத்திருக்கும் இவர், மும்பைக் கும் வேலை நிமித்தமாக அடிக்கடி வந்து போகிறார். "என்னுடைய நகைகள் கான்டெம்பரரி. வெஸ்டர்ன் உடை உடுத் தும் படு மாடர்ன் ஹீரோயின்களுக்காகவே டிஸைன் பண்ணுகிறேன். முன்னேயெல் லாம் 500 ரூபாயிலிருந்து என்னிடம் ஜுவெல்லரி இருந்தது. இப்போது சீப்பான நகைகள் விற்பதில்லை. அதுதான் எங் குமே கிடைக்கும். இப்போதெல்லாம் எக்ஸிபிஷனும் நான் வைப்பதில்லை. டிஸைன்கள் 'திருட்டு'(!) போய் விடுகின் றன. நெக்லஸ், தோடு, ப்ரேஸ்லெட்... என நாட்கணக்கில் நான் எத்தனையோ மணி நேரம் வடிவமைப்பதை, ஒரே நிமி டத்தில் சிலர் ஜெராக்ஸ் காப்பி பண்ணி மார்க்கெட்டில் கொண்டு வந்து விடுகிறார் கள். ஆனால் இனி அப்படி நடக்காது" - சிரிக்கிறார்.

தங்க, வைர நகைகளைப் போல் கிறிஸ் டல் நகைகளுக்கு ரிடர்ன் வேல்யூ இல்லை தான். இருந்தாலும் கையைக் கடிக்காத, பட்ஜெட்டுக்குள் அடங்கிய நகைகள், அதுவும் படு ஃபேஷனான கிறிஸ்டல் நகைகளுக்கு, பெண்கள் தங்கள்

வார்ட்ரோபில் தாராளமாக இடம் கொடுக்கிறார்களாம்.

புனிதா தற்சமயம் படுபிஸியாக இருப்பது 'கல்பலி' என்ற இந்திப்பட ஷூட்டிங்கில். அதில் 'அந்நியன்' புகழ் சதா அறிமுகம். 'ஐயங்காரு வீட்டு அழகை' மேன்மேலும் அழகாக்கிப் பார்க்கிறார் புனிதா த்ரிக்கா!

- லதா சேகர்

# உடையழகு... நடையழகு...



# "டிப்ரஷனிலிருந்து ப்ரோமோஷன்!"

● ராம்சுப்ரமணி, திருவாரூர்

***அழகு எப்போது ஆபத்தாகிறது?***

ஆயுதமாகும்போது!

● சி.இந்து அழகேஷ்,கள்ளக்குறிச்சி

***தங்களைக் கவர்ந்த சரித்திர நாயகர்...?***

கல்கி கிருஷ்ணமூர்த்தி.

● விசு, வேலூர்

***எந்தக் கேள்விக்கு எல்லோரும் ஒரே பதிலைச் சொல்வார்கள்...?***

'சார்...லாங்கா? ஷார்ட்டா?' சலூனில் கேட்கப்படும் வழக்கமான கேள்வி. கமிட் பண்ணிக்க விரும்பாமல் எல்லோரும் வேறு வழியில்லாமல் சொல்லும் பதில் 'மீடியமா வெட்டுப்பா'.

● ரா.பிரசன்னா, மதுரை

***பொய் சொல்வது...உண்மையை மறைப்பது...என்ன வித்தியாசம்?***

பொய் சொல்வதால் உண்மை மட்டுமே மறைக்கப்படுகிறது. உண்மையை மறைப்பதால், பொய்யை விட மோசமான பல வதந்திகள் பரவுகின்றன.

● மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

***கண்ணனின் 'லீலைகளில்' உங்களைக் கவர்ந்த லீலை எது....?***

விஸ்வரூபம் எடுத்தவன், விளையாட்டுப் பிள்ளையாய், 'ஆ'வென்று பிளந்த வாயில் கால் கட்டை விரலைச் சூப்பியபடி ஆலிலையில் மிதந்த 'ஆ - லீலை'.




● பா.அசோக், விருதுநகர்

***பாஞ்சாலி, சீதை, கண்ணகி இவர்களில் யாரை இன்றைய பெண்கள் பின்பற்றலாம்?***

பாஞ்சாலியைப் படைத்தது நெருப்பு. சீதையைக் காத்தது நெருப்பு. கண்ணகிக்கு உதவி, அழித்தது நெருப்பு. ஆக

படைத்தல், காத்தல், அழித்தல் தொழில்களைச் செய்யும் தெய்வமாக பெண்மை போற்றப்பட வேண்டுமென்றால், பெண் நெருப்பாக இருத்தல் வேண்டும்.

● ஸ்ரீலதா, திருநெல்வேலி

***சமீபத்தில் தாங்கள் ரசித்துப் படித்த புத்தகம்?***

வானதி பதிப்பகம் வெளியிடப் போகும் தென்கச்சி கோ.சுவாமிநாதனின் 'நமக்குத் தொழில் நகைச்சுவை' என்ற புத்தகத்துக்கு அணிந்துரை எழுதும் அரிய வாய்ப்பு அடியேனுக்குக் கிடைத்தது. யாம் அறிந்து இரண்டு கலைவாணிகள் உண்டு. ஒருத்தி ஆய கலைகள் அறுபத்து நான்கினை ஆளும் நாம் அறிந்த வாணி. இன்னொருத்தி ஹாஸ்யக் கலையை மட்டும் அள்ளி வழங்கும் ஆகாச வாணி. இந்த 'ஆஹாஸ்ய வாணி'யின் ஒரே வாரிசு 'தினம் ஒரு தகவல்' ஆல் இந்தியா ரேடியோவில் தந்த தென்கச்சியார். இவர் வாழ்க்கைக்கு பகைச்சுவையான எதிர்க்கட்சிகளை நகைச்சுவையால் ஆளும் தென்கட்சியார். ஹாஸ்யம், ஹ்யூமர், ஜோக், காமெடி என்று நகைச்சுவைக்கு பல பெயர்கள் உண்டு. பேரைச் சொல்லும் நாம் நகைச்சுவைக்கு ஊரைச் சொல்லப் போனால் அது தென்கச்சியாகத்தான் இருக்கும்.

● எம்.குமார், மதுராந்தகம்

***எழுதும் பேனாவுக்கு எப்போதாவது முத்தம் கொடுத்தது உண்டா....?***

பெண்-ஃபிரண்டுக்குக் கொடுத்தால் முத்தம். கூரான நிப்பு கொண்ட Pen-Friend-க்குக் கொடுத்தால் ரத்தம்.

# பேனாவுக்கு முத்தம்!



## கிரேஸியைக் கேளுங்கள்

● வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்

***இந்திய கிரிக்கெட் அணி கேப்டன் தோனிக்கு, ரசிகர்கள் அவரது சொந்த ஊரான ராஞ்சியில் கோயில் கட்டப் போகிறார்களாமே?***

'தான்தோனி அப்பன் ஆலயம்' என்று பெயர் வைக்கலாம்.

● மல்லிகா அன்பழகன், சென்னை

***கடன் கொடுப்பது, கடன் வாங்குவது - எது கொடுமை?***

கொடுத்த கடனைத் திருப்பி வாங்குவது...!

**தைலாபுரம் தோட்டம் பொங்கல் கொண்டாட்டங்களுக்குத் தயாராகிக் கொண்டிருந்தது.**
**பா.ம.க. பொதுக் குழுவில், திருமங்கலம் தேர்தலில் நடுநிலை என்ற முடிவெடுத்த நிலையில், டாக்டர் ராமதாஸைச் சந்தித்தோம். பல விவகாரங்களில் மனக் கதவைத் திறந்தார்...**

## பா.ம.க. அளவுகோல்

1998ம் வருடத்திலிருந்து பார்த்தால், அது சட்டமன்றத் தேர்தலாகட்டும்; பாராளுமன்றத் தேர்தலாகட்டும்; பா.ம.க. எந்தக் கூட்டணியில் இருக்கிறதோ அந்த அணி வெற்றி வாகை சூடுகிறது. 2001 சட்டமன்றத் தேர்தலில் அ.தி.மு.க.வோடு கூட்டணி அமைத்தோம். ஜெயலலிதாவின் போக்கு பிடிக்காததால் நான்கே மாதங்களில் வெளியே வந்துவிட்டோம். அதன் பிறகு பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகப் பணியாற்றினோம். 2006ல் தி.மு.க. வோடு கூட்டணி அமைத்தோம். அ.இ. அ.தி.மு.க.வின் செயல்பாடுகளைக் கடுமையாக எதிர்த்து வந்ததால், எங்கள் கூட்டணி இயல்பாக தி.மு.க.வோடு அமைந்தது. கடந்த நாற்பது வருடங்களில் அமைந்த கூட்டணிகள் எதுவும் கொள்கை அடிப்படையில் அமைந்தவை அல்ல; தேர்தல் உடன்பாடுதான். கம்யூனிஸ்டுகள் தேர்தலுக்குத் தேர்தல் ஏதேனும் காரணம் சொல்லி அணி மாறுகிறார்கள். அவர்களைச் சந்தர்ப்பவாதிகள் என்று யாரும் குற்றம் சாட்டுவதில்லை. எங்களை மட்டும் ஏன் அவதூறு பேசுகிறீர்கள்?

## திருமங்கலம் நடுநிலை!

மத்தியில் அமைந்துள்ள ஐக்கிய முற்போக்கு அணி, ஒரு குறைந்தபட்ச செயல்திட்டத்தின் அடிப்படையில் அமைந்தது. ஆனால், தமிழகத்தில் தி.மு.க. தலைமையிலான ஜனநாயக முற்போக்கு அணி அப்படியல்ல. இருந்தாலும் 2006ல் தி.மு.க.வோடு கூட்டணி அமைத்து வென்ற நாங்கள், ''ஆட்சியில் பங்கு வேண்டாம்; ஆனால் நீங்கள் மைனாரிட்டியாக இருப்பதால் ஐந்து வருடம் உங்களுக்குத் துணை நிற்போம்'' என்று உறுதியாகக் கூறினோம். எங்கள் உட்கட்சிக் கூட்டத்தில் குரு பேசிய பேச்சை அடிப்படையாகக் கொண்டு, ஒரு பொதுக்குழுக் கூட்டம் போட்டு எங்களைக் கூட்டணியிலிருந்து வெளியேற்றியது தி.மு.க. ஆனாலும் வருத்தப்படாமல் ஆக்கபூர்வமான எதிர்க் கட்சியாகப் பணியைத் தொடர்ந்தோம். இந்த நிலையில் திருமங்கலம் இடைத் தேர்தல் வந்தது. சமீபத்தில் தி.மு.க.வின் பொதுக்குழு மீண்டும் கூடியது. எங்கள் ஆதரவு வேண்டுமென்று தி.மு.க. நினைத்திருந்தால், அதன் பொதுக்குழு மூலம் எங்களுக்கு மீண்டும் அழைப்பு விடுத்திருக்கவேண்டும். அப்படி ஏதும் பொதுக் குழு அழைப்பு விடுக்காத நிலையில், நாங்கள் எப்படி தி.மு.க.வை ஆதரிக்க முடியும்? இந்த நிலையில்தான் பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகச் செயல்படும் நாங்கள், இடைத்தேர்தலில் நடுநிலை முடிவெடுத்தோம். மேலும் இடைத் தேர்தல் பற்றிய எங்கள் கண்ணோட்டமே வேறு. அதிகார துஷ்பிரயோகம், பண பலம் இடைத்தேர்தலில் கட்டவிழ்த்து விடப்படுமாதலால் எந்தக் கட்சி வென்றதோ, அந்தக் கட்சியின் பிரதிநிதியே மீண்டும் சட்டமன்ற உறுப்பினராக நியமிக்கப்பட வேண்டும். இது சாத்தியமில்லாவிட்டால்,

# தி.மு.க.வை எப்படி ஆதரிக்க முடியும்?

**- டாக்டர் ராமதாஸ் பேட்டி**

பிரசாரத்தில் எளிமை கண்டிப்பாகப் புகுத்தப்படவேண்டும். இப்போது இடைத் தேர்தல் நடத்தப்படும் முறை, நமது இளைஞர்களுக்கு ஜனநாயகத்தைப் பற்றி தவறான மதிப்பீட்டை அளிக்கிறது.

**காங்கிரஸ் தலைமை சாத்தியமா?**

இரண்டு திராவிடக் கட்சிகளுக்கும் மாற்றாக காங்கிரஸ் தலைமையில் அணி அமைய வேண்டும். இப்படியொரு எதிர்பார்ப்பு மக்களிடம் இருக்கிறது. ஆனால், காங்கிரஸ் தலைமையிலான அணி பாராளுமன்றத் தேர்தலுக்கு மட்டுமே.

**விஜயகாந்த்?**

தே.மு.தி.க. என்பது கொள்கையற்ற ஒரு ரசிகர் கூட்டம். அதை ஒரு கட்சியாக நான் கருதுவது கிடையாது. இரண்டு கழகங்களுக்கும் மாற்று விஜயகாந்த் என்பது கொஞ்சம்கூட அடிப்படையில்லாத கருத்து.

**விடுதலைச் சிறுத்தைகளின் எதிர்காலம்?**

காங்கிரஸோடு உள்ள தமது கருத்து வேறுபாட்டைக் களைய திருமாவளவன் தயாராக இருக்கிறார். ஆனால் ஒன்று நிச்சயம். நானும்,

திருமாவும் ஒரே அணியில்தான் இருப்போம். இதில் எந்த மாற்றமும் இருக்காது.

## இலங்கை விவகாரம்?

இலங்கையில் நடக்கும் அக்கிரமங்களைப் பார்த்து, தமிழர்களைப் பற்றி, மத்திய அரசு கொஞ்சம்கூட கவலைப் படாமல் இருப்பது தெரிகிறது. சட்டமன்றத்தில் இரண்டு தீர்மானங்கள் போட்ட பிறகும், தமிழ்நாட்டு மக்கள் உணர்வை மதிக்காமல் செயல்படுகிறது மத்திய அரசு. மத்தியில் ஒரு சில அதிகாரிகள் உட்கார்ந்துகொண்டு, தமிழர்களுக்கு எதிரான நிலை எடுக்கிறார்கள். காங்கிரஸ் இப்படி நடந்துகொள்வதைப் பார்த்து கலைஞர் சும்மா இருப்பது சரியல்ல. அவருக்கு எங்களைவிட அதிகமான பொறுப்பு இருக்கிறது. இந்த நிலையில் காங்கிரஸோடு தோழமையைத் தொடர்வது தமிழர்களுக்குச் செய்யும் துரோகமாக அமைந்துவிடுமே என்ற கவலை இருக்கிறது.



**அதிகார துஷ்பிரயோகம், பண பலம் இடைத் தேர்தலில் கட்டவிழ்த்து விடப்படுமாதலால் எந்தக் கட்சி வென்றதோ, அந்தக் கட்சியின் பிரதிநிதியே மீண்டும் சட்டமன்ற உறுப்பினராக நியமிக்கப்பட வேண்டும்.**

## அ.தி.மு.க.வுடன் கூட்டு?

அடுத்த மாதம் எங்கள் பொதுக் குழுவில் காங்கிரஸ் மற்றும் தி.மு.க.வோடு கூட்டணி அமைப்பது, அல்லது வேறு ஏதேனும் சாத்தியங்களை ஆராய்வது குறித்து ஜனநாயக முறையில் கருத்தறிந்து முடிவெடுப்போம்.

## பூரண மதுவிலக்கு!

பூரண மதுவிலக்கு என்று தி.மு.க. தீர்மானம் போட்டிருப்பது பாராட்டத்தக்கதுதான். ஆனால், அது செயலில் இருக்க வேண்டுமே. முதல் படியாக விற்பனை நேரத்தை ஒரு மணி நேரம் குறைத்திருப்பதாகச் சொன்னார்கள். இங்கு ரேஷன் கடைகூட எட்டு மணி நேரம்தான். ஆனால் மதுக்கடை 12 மணி நேரம். மேலும் சனி, ஞாயிறு, பண்டிகை நாட்களில் மதுக் கடைகளுக்கு விடுமுறை விடவேண்டும். இதையெல்லாம் செய்தால் பூரண மதுவிலக்குக்கு முதல்படி என்று சொல்லலாம். மதுவிலக்கு வந்தால், உள்ளார்ந்த ஈடுபாடு பூரண மதுவிலக்கில் இருக்க வேண்டும். அது இல்லை என்பதுதான் வேதனையான செய்தி.

**- ப்ரியன்**

## அருள்வாக்கு

# பற்றுதலை விடு!



இப்போதைய பட்டணவாச வாழ்க்கை முறையும், நவநாகரிகமும் வெறும் பணத்தையும் லௌகிக சௌக்கியங்களையும் தேடிப் போனதால் உண்டானவைதாம். பணத்துக்கான இந்த வேட்கை போக வேண்டும். குணவானாக வேண்டும் என்பதற்கே அவரவரும் பிரயத்தனப்படவேண்டும். மேலும் மேலும் பணம் தருகிற தொழில், மேலும் மேலும் கியாதி தருகிற காரியங்கள் இவற்றை விட்டு விட்டு நிம்மதியோடு நிறைவோடு அடங்கி வாழ்வதற்கு மனசார முயற்சி செய்ய வேண்டும். பக்தியும் பூஜையும்கூடப் பணத்துக்காக, மற்ற சௌகரியங்களுக்காகச் செய்யப்படலாம். நம் பூஜையை மற்றவர்கள் எப்படிச் சிலாகிக்கிறார்கள், நமது சாஸ்திர பாண்டித்தியத்தைப் பிறர் எப்படி மெச்சுகிறார்கள் என்பதில் எல்லாம் ஆசை உண்டாகக் கூடும். இவ்விஷயங்களில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மூலம் அகம்பாவத்தை விட்டுத் தொலைப்பதுதான். அது தொலைந்தால் அடக்கத்தோடு, ஆனந்தத்தோடு, எந்தக் காரியத்தையும் ஈசுவரார்ப்பண புத்தியோடு செய்து நாமும் க்ஷேமம் அடையலாம்; லோகத்தையும் க்ஷேமமாக வைத்திருக்கலாம்.

'நாகரிக வாழ்க்கை' என்கிற பெயரில் ஏதோ ஒன்றுக்கு ஆசைப்பட்டுக் கொண்டு இப்போது பல நல்ல வழிகளை விட்டு விட்டோமே என்பதை நினைத்தால்தான் பரிதாபமாக இருக்கிறது. 'நாகரிக' மார்க்கத்தில் போய்க்கொண்டிருந்த மேல் நாட்டில் பலர், வாழ்க்கையின் நிறைவு இதில் இல்லவே இல்லை என்று சலிப்படைந்து, நம்முடைய வேதாந்தம் பக்தி முறை இவற்றுக்குத் திரும்ப ஆரம்பித்திருக்கிறார்கள்.

இனியாவது பணத்தில் பற்றுதலை விட வேண்டும். சத்குணங்களைச் சம்பாதிக்கப் பாடுபட வேண்டும். அப்போதுதான் ஜன்மா எடுத்த பலனை நாம் அடைந்து லோகத்துக்கும் உபகாரம் செய்தவர் ஆவோம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

"மகிழ்ச்சியான குடும்பங்கள் அனைத்தும் ஒரே மாதிரியாக இருக்கின்றன. வருத்தப்படும் குடும்பங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமாக வருத்தப்படுகின்றன." டால்ஸ்டாயின் அன்னா கரினீனா புத்தகம் இப்படி ஆரம்பிக்கிறது. அன்னாவுக்கு அரண்மனை வாழ்க்கை.

ஆனாலும் அன்னாவின் வாழ்க்கையில் உல்லாசம் இல்லை. ஒரு வெறுமை. உணவு, உடை, பொன் நகைகள், வசதிகள் எதுவும் அவரை முழுவதுமாக வசீகரிக்கவில்லை. கணவர் கரினீனைப் பொறுத்தவரை அன்னா அவர் மனைவி அல்ல; போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டிய வெற்றிக்கோப்பை.

'வீட்டில் பிரச்னை, உடனே வா' என்று அன்னாவை அழைக்கிறார் சகோதரர் ஒப்ளோன்ஸ்கி. அன்னா புறப்படுகிறார். அவரை வரவேற்று அழைத்துச் செல்ல ரயில் நிலையத்தில் காத்துக் கொண்டிருக்கிறார் ஒப்ளோன்ஸ்கி. அன்னா தற்செயலாகத்தான் கவுண்ட் வ்ரான்ஸ்கியைச் சந்திக்கிறார். தன் தாயாரை அழைத்துச் செல்வதற்காக அவர் அங்கே வந்திருந்தார். அன்னா வந்து சேர்கிறார்; வ்ரான்ஸ்கியின் தாயாரும். இருவரும் ஒன்றாகவே வருகிறார்கள். அருகருகே அமர்ந்து பயணம் செய்தவர்கள் என்பதால் பரிச்சயமாகியிருந்தார்கள். ரயில் நிலையத்தில் கனத்த இதயத்துடன் வ்ரான்ஸ்கியைப் பிரிகிறார்.

'நீதான் என் குடும்பத்தைச் சரிசெய்ய வேண்டும்' என்று தன் பிரச்னையை விவரிக்கிறார் சகோதரர். அவர் பிரச்னை, காதல். விவகாரம் மனைவிக்குத் தெரிந்துவிட்டது. அன்னா அவர் மனைவியிடம் பேசுகிறார். 'கண்டிக்கத்தக்கதுதான்; ஆனால் ஒருமுறை மன்னித்து விடுங்கள், அவர் உங்களை உயிருக்குயிராக நேசிக்கிறார்' அன்னா சமாதானப்படுத்துகிறார்.

# இப்படிக்கு...

வந்த வேலை முடிந்தது. ஆனால் அன்னாவின் மனம் அலைபாய ஆரம்பித்தது. ஏன் இன்று நான் தவியாகத் தவித்துக் கொண்டிருக்கிறேன்? கவுண்ட் வ்ரான்ஸ்கியை ஏன் நான் ரயில் நிலையத்தில் சந்திக்கவேண்டும்? விரைந்து வா என்று என் சகோதரர் ஏன் என்னைத் திடீரென்று அழைக்க வேண்டும்?

தொடர்பற்ற சம்பவங்கள், ஆழ்ந்து யோசிக்கும்போது, எல்லாவற்றுக்கும்




# உலகை உலுக்கிய புத்தகங்கள்!

■ மருதன் ■

ஒரு தொடர்பு இருப்பது போல அன்னா தவிக்க ஆரம்பித்தார்.

வ்ரான்ஸ்கியும் அன்னாவும் ஒருவரை ஒருவர் காதலிக்க ஆரம்பித்தார்கள். அன்னா திருமணமானவர் என்பதை அறிந்தபின்பும் தொடர்ந்தது இந்தக் காதல். வ்ரான்ஸ்கி நேசிக்கும் விதத்தைக் கண்டதும், தன் கணவரின் குறைகள் ஒவ்வொன்றும் பூதாகர

# காதல்



மாக உருவெடுக்க ஆரம்பித்தன.

நான் செய்வது நியாயம்தான். நான் இதுவரை அனுபவித்து வந்த வெறுமையை இவர் நிரப்பிவிட்டார். எனக்குத் திருமணம் ஆகியிருக்கலாம். ஆனால், நான் காதலிப்பது இதுவே முதல் முறை. மானின் தலையைக் கொம்புகளுடன் வீட்டில் மாட்டி வைப்பார்களே, அப்படித்தான் என்னை கரினீன் வைத்துக்கொண்டிருக்கிறார். ஒரு பெருமைக்காக. பெருமிதத்துக்காக.

கரினீனுக்கு விஷயம் தெரிய வருகிறது; ஊர், உலகத்துக்கும். சமுதாயம் அன்னாவை விமர்சிக்கிறது; பரிகசிக்கிறது; தூற்றுகிறது. சமூகமே வேண்டாம் என்று இருவரும் வெளிதேசங்களுக்குச் செல்கிறார்கள்.

அச்சம், குழப்பம், அவமானம். செல்லும் இடமெல்லாம் துரத்துகிறது. இதுவா காதல்? நான் தேடியது இந்தக் காதலைத்தான் என்றால், முழு திருப்தி வந்திருக்கவேண்டுமே? எங்கே தவறு? எதைச் செய்யத் தவறிவிட்டேன்? ரயில் நிலையத்துக்கு விரைகிறார் அன்னா. ரயில் பாய்ந்து வருகிறது. அவரும் பாய்கிறார்.

அன்னா கரினீனா முதலில் வெளிவந்தது 1877ம் ஆண்டு. அன்று தொடங்கி இன்றுவரை, உலகம் அதிகம் நேசித்த ஒரு பெண் அன்னா.

மொழிபெயர்ப்பில் ஆயிரம் பக்கங்கள் நீளும் இந்தப் புத்தகம், வாழ்க்கைக்குத் தேவையான ஒழுக்க விதிகள், ஒழுக்கத்தின் அவசியம் பற்றி, தவறான சிந்தனைகள் எத்தனை ஆபத்தானவை என்பது பற்றி காதலோடு பேசிச் செல்கிறது.

# சொல்வாசம்

கவிதைத் தொடர்

1

## தல வரலாறு

பெருமாள் கோயில் அழகானது
உள்ளிருக்கும் பிராட்டியார் அழகும்
சொல்லிமாளாது -
என் இளம்பிராயத்துத் தோழியைப் போலவே.

கோயிலை ஒட்டி திருக்குளம்.
அதில்தான் நானும் அவளும்
நீந்தி விளையாடுவோம்.

கோயில் கோபுரத்தில்
தலைமுறை தலைமுறையாக
ஒரு புறாக்கூட்டம் வசித்து வருகிறது.
பிராகாரத்தில் வைத்து அவள்
ஜடையைப் பிடித்து இழுத்ததை
அந்தப் புறாக்கள் சொல்லி இருக்கும்போலும்
பெருமாளிடம் -
அவர் முகத்தின் கேலிப் புன்னகை தாங்காது
குனிந்து கொள்வேன் தலையை.

கோயிலில் கொடுக்கப்படும்
அப்பம் வடை வெகு பிரசித்தம்.
நெய் வழியும் அப்பம் தின்போம்
ஆளுக்குக் கொஞ்சமாய்
அவளும் நானும் -
எண்ணெய்ப் பிசுக்கான என் கையை
அவள் பாவாடையில்
துடைத்து விடுவாள்!

கண்ணாமூச்சி விளையாட்டில்
கருடாழ்வார் பின்னாடிதான்
ஒளிந்து கொள்வாள் -
கருடாழ்வார் முதுகுக்குப்
பின்னாலிருந்த இருட்டில்
கண்டுபிடித்தோமா?
கட்டிப்பிடித்தோமா?
கருடாழ்வாருக்கே வெளிச்சம்!

காலம் கம்சனாகி
என்னை உதைத்ததில்
நான்
கிழவனாகிவிட்டேன்
என் இளம்பிராயத்துத்
தோழியின் கன்னம்போலிருந்த
கோயிலின் வழவழப்பான
பெரிய தூண்களை
மெல்லத் தீண்டினேன் - கைநடுங்க!

வயிறு பதைத்தது -
தூணைப் பிளந்துகொண்டு
வரக்கூடும் என்
தோழி என்பதாக!



"தலைவர் ஒரு வார்த்தை சொல்லட்டும்... நா தீக்குளிக்க ரெடி!"

"என்ன சொல்லணும்?"

"ஃபயர் சர்வீசுக்கு ஃபோன் போட்டுச் சொல்லணும்!"

- அம்பை தேவா

"இருட்டில் என்ன பெரியவரே தேடுறீங்க?"

"ஐம்பது காசு காணல."

"சரி காலையில் தேடிக்கலாம் போங்க."

"காலையிலிருந்துதான் தேடறேன் தம்பி...!"

- பா.வளர்மதி





"நம் மன்னர் ஏன் கடும் கோபத்தில் உள்ளார்?"

"புலவர் அவரைப் பற்றி 'புறமுதுகாற்றுப்படை' பாடியுள்ளாராம்."

- சாயம் வெ.ராஜாராம்

"கட்சில சீட் குடுத்தும் தேர்தல்ல நீங்க ஏன் நிக்கல?"

"கள்ள வோட்டுக்கான செலவை நீங்களே பாத்துக்கணும்னு கட்சில சொல்லிட்டாங்க!"

- அம்பை தேவா





"நம்ம சரோவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டியே... எப்படி இருக்கே?"

"Sorrowவா இருக்கேன்."

- சாயம் வெ.ராஜாராம்

# Sorrow ஜா சாதாரண ஆயிட்சே!

"விடாம எனக்கு பகல் கனவுகளா வருது டாக்டர்!"

"எதுக்கும் ஆபீஸ் வேலைக்கு வி.ஆர்.எஸ். குடுத்துப் பாருங்க!"

- அம்பை தேவா



# கிங்... க்வீன்... ஜாக்!

இனிப்புப் பெட்டியுடன் உமா வீட்டுக்குள் நுழைந்தபோது, அங்கு இன்னொரு உலக யுத்தம் பாதி நடந்திருந்தது.

அம்மாவின் எதிரே ஆக்ரோஷமாய் அப்பா.

''முடிவா நீ என்னதான் சொல்றே?''

''.....''

அம்மா இந்த மனிதரிடம் இனி பேசிப் பயனில்லை என்கிற தோரணைக்குப் போய்விட்ட நிலை

''நான் வாக்கு கொடுத்தாச்சு... நீ எப்படி தடுக்கறேன்னு பார்க்கறேன்.''

ஏதோ ஒரு கவரை ஆட்டி ஆட்டிப் பேசினார். அதற்குள் என்ன இருக்கிறது என்று யூகிக்க முடியவில்லை உமாவால்.

உமாவைப் பார்த்ததும் ஏனோ பேசாமல் போய்விட்டார்.

''என்னம்மா கலாட்டா?''

எப்போதேனும் மனசு உற்சாகமாய் உணரும்போது, உடனே ஸ்வீட் வாங்கிக் கொடுப்பது உமாவின் பழக்கம்.

'எனக்கு ஹேப்பியா இருக்கு இப்ப... இனிப்பு எடு... கொண்டாடு...'

அவளுக்கு ஆபீசில் இதனாலேயே 'ஸ்வீட்டி' என்று செல்லப் பெயர் வந்துவிட்டது.

தினகர் அதற்கும் ஒரு விளக்கம் வைத்திருந்தான்.

'உன் கோபம், வருத்தம் இதெல்லாம் கூட நீ ஷேர் பண்ணிக்கறே மறைமுகமா. யாரோடவும் பேசாம... விஷ் பண்ணாம, சைலண்ட்டா இருக்கறப்ப...'

அவன் வார்த்தைகள் கட்டன. ஆனால், எதுவும் பேசாமல் விட்டுவிட்டாள். இந்த குணமும் அம்மாவிடமிருந்துதான் வந்திருக்க வேண்டும்.

''என்னம்மா.... பிரச்னை?''

''உனக்கு மாப்பிள்ளை பார்த்திருக்கார்.''

''நல்ல விஷயம்தானே.''

பெண்ணின் கிண்டலை ரசிக்க அம்மாவுக்கு முடியவில்லை.

''ரெண்டாம்தாரம். பத்து வயசுல ஒரு பொண்ணும், எட்டு வயசுல ஒரு பையனும் இருக்காங்களாம். இவரோட சீட்டு விளையாடறவரோட பையனாம். நாப்பத்தஞ்சு வயசு... ஃபோட்டோ பார்க்கறியான்னு கேட்டார். சண்டை ஆரம்பிச்சுது.''

''அப்பா... ஃபோட்டோ காட்டுங்க.''

உமாவே தேடிப் போனாள்.

அப்பா இதை எதிர்பார்த்திருக்க மாட்டார் என்று அவர் திணறலிலேயே புரிந்தது.

''எ...ந்த ஃபோட்டோ?''

''எனக்காக நீங்க பார்த்த மாப்பிள்ளை.''



''அ...து எ...துக்கு?''

பக்கத்திலேயே கவர் கிடந்தது.

''ரெண்டு குழந்தைகளாப்பா?''

''ம்...''

''இப்ப யார் பார்த்துக்கறாங்க?''

''மாமனார் வீட்டுல விட்டிருக்கார். இவருக்கு அம்மாவும் இல்லை...''

அப்பா இப்போது சுதாரித்துக்கொண்டு விட்டார். பதில்கள் நிதானமாய் வந்தன.

''எப்ப தவறிப்போனா... முதல் மனைவி?''

இந்தக் கேள்வியே அநாவசியம் என்று அப்பாவின் முகத்தில் தெரிந்தது. இரண்டாவது பையனுக்கு எட்டு வயசு. பிரசவத்திலேயே போயிருந்தாலும் எட்டு வருடங்கள்.

''அது ஞாபகம் இல்லே... பிரைவேட்ல வேலை. ஒரு கெட்ட பழக்கமும் இல்லை. மாமனார், மாமியாருக்கும் சிரமம் தரவேணாம்னு யோசனை. போய்ப் போய்

ரிஷபன்



பசங்களைப் பார்த்துட்டு வர கஷ்டம் வேற. வீட்டோட ஒருத்தி இருந்தா இந்தச் சிக்கல் இல்லே பாரு.''

''நானும் வேலைக்குப் போறேனேப்பா...''

''அதனால என்ன... பசங்க பெரியவங்க. சோறு ஊட்ட வேணாம். அவங்க வேலையை அவங்களே செஞ்சுக்கிற மாதிரி...''

''நைஸ்...பா...''

உமாவுக்கு நிஜமாகவே சந்தோஷம் வந்தது அதைக் கேட்டு.

''அப்புறம் என்ன... பேசாம ரெண்டு பேரையும் கூடவே வெச்சுக்கிட்டா இவர் ஆபீஸ் போகறவரை இருக்கலாம். அப்புறம் வீட்டுக்கு வந்ததும் அவங்களோடே இருக்கலாமே. அதுக்கு எதுக்குக் கல்யாணம்?''

அப்பாவின் முகம் மாறியது. உமா தன்னுடன் விளையாடுகிறாள் என்று நினைத்து எரிச்சலானது புரிந்தது.

''உனக்குப் புரியாது. அவனுக்குச் சின்ன வயசுடி. அதுக்குள்ள தனியாளா நிக்கணுமா?''

''ஏம்பா தனியாளு... அவரோட அப்பா... ரெண்டு பசங்க... ஹேப்பியா இருக்கலாமே.''

''போடி...''

அப்பாவுக்கு மூச்சிரைத்தது. பெண்ணுடன் எந்த அளவு இறங்கி வந்து உரையாடல் நிகழ்த்துவது என்கிற குழப்பம் தெரிந்தது.

''லோ... அவருக்கும் ஒரு மனைவி தேவை... அதானே?''

''ஆமா...''

''குழந்தைங்க மேனேஜ் பண்ணும் அம்மா இல்லாம... ஆனா, இவரால முடியலே!''

''உளறாதே... புரியாம பேசாதே...''

''நம்ம வீட்டுலயும் நீங்க ரெண்டு பேரும் வெளி உலகத்துக்குத்தான் கணவன், மனைவி... எப்படி மேனேஜ் பண்றீங்க?''

உமாவின் கன்னத்தில் விழுந்த முதல்



## டீன் ஏஜ் டைரக்டர்

ப்ளஸ் டூ கலாட்டாவாக 'காதல் தோழி' தயாராகிறாள். அன்புக்கு ஏங்கும் ப்ளஸ் டூ மாணவி மீது தோழமை கொள்கிறான் சக மாணவன். இது வெறும் 'ஃப்ரண்ட்ஷிப்தான்' என்று வாதாட, சகாக்கள் பேசிப் பேசி, உசுப்பேற்றி, அதைக் காதலாக மாற்றிவிட, தோழி காதலியாகிறாள். ஒரு தோழி காதலியாவதற்குள் இருக்கும் இடைப்பட்ட பிரச்னைதான் கதையாம். +2 ஏஜ் குரூப்தான் படம் முழுக்க. கதை, திரைக்கதை எழுதி



# புதிதாய்ப் பிறந்தேன் போகியில் எரிகிறது... என் அழுக்கை!

**சிவபாரதி**

அறை! சட்டென்று நிகழ்ந்து விட்டது.

அம்மா ஓடி வந்தாள். தன் துக்கம் மகளுக்கும் தொடர்கிறது என்கிற பதட்டம்.

''கோபப்படாதீங்கப்பா... யோசிங்க...''

உமாவின் கண்கள் கலங்கி இருந்தாலும் குரலில் நிதானம் தப்பவில்லை.

**அ**ன்றிரவு அப்பா ஹாலில் விளக் கெரித்துக் கொண்டு, கைவசம் இருந்த சீட்டுக்கட்டைப் பிரித்து, தனக்குத் தானே ஆடிக் கொண்டிருந்தார். சாப்பிடவும் வரவில்லை.

உமா, அம்மா இருவரும் சாப்பிட வில்லை. காலையில் பார்த்தபோது இனிப்பில் எறும்புகள் மொய்த்திருந்தன.

''வேஸ்ட்டா போச்சேடி.''

அம்மா எதைச் சொன்னாள் என்று புரிந்தது.

''எறும்பாவது சாப்பிடட்டும்மா... தட்டி விட்டுராதே... பின் பக்கமா வெளியே வெச்சுரு.''

''நீயே வெச்சுட்டு வா...''

உமா எறும்புகளின் அணிவகுப்பைக் கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்தாள்.

''இன்னிக்கு லீவு போடவாம்மா?''

''உன் இஷ்டம்.''

''நீயும் வாம்மா... எங்கேயாவது வெளியே போயிட்டு வரலாம்.''

''நான் வரலே...''

''உனக்கு அலுப்பு வரலியாம்மா?''

''எதையும் மனசுக்குக் கொண்டு போனாத்தான் அலுப்பும், இனிப்பும். எட்ட வெச்சு வேடிக்கை பார்த்தா ஒரு நாள் ஓடறது ஒரு நிமிஷத்துல.''

அம்மா! பெண் தினகர்! ஏன் இந்த மாதிரி அம்மாவை இதுவரை யோசிக்கவே இல்லை. அப்பாவின் ஆக்கிரமிப்பில் சுயம் தொலைத்த பெண்மணி என்றே பட்டியல் போட்ட வைத்தது தன் தவறுதானா?

''அம்மா...''

''வலிக்கிறதாடி?''

கன்னம் தொட்டுக் கேட்டாள். இரு

---

இயக்கும் நிதின் ராமகிருஷ்ணனுக்கு வயது என்ன தெரியுமா? ப்ளஸ் டூ ஏஜ்தான் - பதினேழு. குளிர் 100-ல் ஹீரோவாக நடித்த சதிஷோடு புதுமுகம் அர்ச்சனா. இவர்களோடு யூத் ஃபுல்லா இருக்க இருபத்தைந்து ஸ்டூடன்ட்களும் கலக்குறாங்க. நாற்பத்தைந்து வயசு ஹீரோ ஸ்டூடன்டா நடிக்கிற இந்தக் காலத்தில் அசலாக ஒரு படம் 'காதல் தோழி'. ஸ்டூடன்டுகள் ஆதரிக்க வேண்டும் என்கிறார் நிதின் ராமகிருஷ்ணன். (ஆதரிச்சா போச்சு!)

**- கலீல்**

விரல்களின் பதிந்த தடம்... லேசாய்...

''இல்லம்மா...''

''கஞ்சி போடட்டுமா...?''

''அம்மா... எனக்குக் கல்யாணமே வேண்டாம்னு தோணுதும்மா...''

''ம்''

''ஏதோ விரக்தியில சொல்லலே... நல்லா யோசிச்சுத்தான் சொல்றேன்.''

அம்மா மௌனமாய் இருந்தது. யோசித்ததாலா... அல்லது யோசிக்க விரும்பாததாலா... என்று புரியவில்லை.

''தினகர் மேல எனக்குப் பிரியம் உண்டு. ஆனா, அது கல்யாணம் வரைக்கும் போகுமான்னு புரியலே. அவனுக்கும் சில அபிப்ராயங்கள், யோசனைகள், தெளிவுகள், தீர்மானங்கள் எல்லாம் இருக்கு... அது எப்பவும் எனக்கு சந்தோஷம் அல்லது... நிம்மதி தருமான்னு தெரியலே... ரெண்டு பேரும் பிரியமான முறையில முரண்படறோம்...''

அம்மா இப்போது உமாவைக் கூர்ந்து கவனித்தாள்.

''அவனுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக்கிற ஆசை இருக்கான்னு கூட எனக்குத் தெரியாது. கேட்டுத் தெரிஞ்சுக்கிற விருப்பமும் இப்ப எனக்கு இல்லே... நான் அவனைக் கல்யாணம் பண்ணிக்கிறதால என்ன மாற்றம் வரும்னு புரியலே.''

''என்னடி சொல்றே?''

''அம்மா... அப்பாவை விட்டுட்டு நீ என்னோட வர்றியான்னு கேட்க நினைச்சேன். வேணாம்மா... அதுவும் அவசியம் இல்லே... நாம இப்படியே இருக்கலாம்...''

''எங்க காலத்துக்குப் பிறகு நீ தனியா...''

''இல்லம்மா... நான் தனி இல்லே... இப்ப தினகர்... அப்ப... யாராவது என் சுயம் புரிஞ்சு... என்னோட நல்ல நட்பு பாராட்டி...''

''இது வெறும் கனவுடி... யதார்த்தம் இல்லே...''

''அப்பாவோட வாழ்க்கை சீட்டுக் கட்டுக்குள்ள அடங்கற மாதிரி... உன்னோட வாழ்க்கை சமையல்கட்டுல முடியற மாதிரி... என்னோட வாழ்க்கை நினைவுக் கூட்டுல இருக்கட்டுமே...''

''தினகரே வந்து கேட்டா?''

''அப்ப பார்க்கலாம். நான் முடிவு எதுவும் எடுக்கலம்மா... ஆனா, முடிவு எடுக்க வேண்டிய சூழ்நிலை வந்தா... நல்ல முடிவா எடுக்க... நம்ம மனசுல ஒரு தெளிவு வேணும் இல்லியா... அதைத் தாம்மா இப்ப வளர்த்துக்கறேன்...''

எழுந்து நின்ற மகளிடம் வயதுக்கு மீறிய முதிர்ச்சி இருப்பதாய் புலப்பட்டது அம்மாவுக்கு. தன்னையும் அறியாமல் பெருமூச்சு விட்டாள். அதில் கொஞ்சம் பெருமிதம் குழைந்திருந்தது.

(முடிந்தது)





''அவர் போலி டாக்டருன்னு எப்படிச் சொல்றே?''

''அடிக்கடி ஞாபக மறதி ஏற்படுதுன்னு சொன்னதுக்கு மெமரி கார்டு யூஸ் பண்ணுங்கன்னு சொல்றாரே.''

- மன்னை சதீரா

## காதைக் கொடுங்க

● திருமங்கலம் தேர்தலுக்குப் பின்னர் ஆட்சி மட்டத்தில் பல அதிரடி மாற்றங்களுக்குத் தயாராகிறது தி.மு.க. என்கிறார்கள். திருப்தியில்லாத செயல்பாடுகளுக்காக எட்டு அமைச்சர்கள் கழற்றிவிடப்படலாம் என்று பேச்சு அடிபடுகிறது. ஊரக வளர்ச்சித் துறையை விடுவதற்கு ஸ்டாலினுக்கு உடன்பாடு இல்லாவிட்டாலும், எதிர்காலத்தில் சுலபமாக கையாள வேண்டுமென்பதற்காக, இப்போதே அவர் உள் துறையை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது முதல்வர் விருப்பம். பூங்கோதையை மீண்டும் சேர்த்தே ஆகவேண்டும் என்று பிடிவாதத்துடன் இருந்த முதல்வரின் குடும்ப உறுப்பினர்களின் ஆசை நிறைவேற்றப்படும் என்று சொல்கிறார்கள். சில காங்கிரஸ் மேலிடத் தலைவர்களும், தமிழ்நாட்டுத் தலைவர்களும் அடிக்கடி தப்புத்தாளங்கள் போடுவதால், காங்கிரஸை ஆட்சியில் இணைத்துக் கொண்டால் என்ன என்ற சிந்தனையும் தீவிரமாகக் கவனத்தில் இருக்கிறதாம்.



## சபாஷ் சரியான போட்டி

● என்னதான் குனிந்து போய் உறவுக்குக் கைநீட்டினாலும், பா.ம.க. மிகவும் 'பிகு' செய்து கொள்வது கண்டு மிகவும் கடுப்புடன் இருக்கிறது தி.மு.க. மேலிடம். ''இனியும் பா.ம.க.வை நம்பி, 'கடையை'த் திறந்து வைத்துக் கொண்டிருக்கக்கூடாது'' என்று ஆவேசமாக, தலைமையிடம் இளையதலைமுறை வாதிட்டதாம். ''பா.ம.க.வுக்கு திருமங்கலத்தில் எந்தச் செல்வாக்கும் இல்லை. இப்படியிருக்க டாக்டர் நடுநிலை என்று அறிவித்தது தேவையில்லாத ஒன்று'' என்கிறார்கள் தி.மு.க. பிரமுகர்கள். இந்த நிலையில் தமிழ் ஓசைக்கு மாதம் 30 லட்சமாக இருந்த அரசு விளம்பரத்தை 3 லட்சமாக கலைஞர் குறைத்துவிட்டதால் கடுப்பில் இருக்கிறாராம் டாக்டர்.

● ஸ்டாலினுக்குப் பொதுச் செயலாளர் பொறுப்பு கொடுக்க இயலாத நிலையில், பொருளாளர் பதவியுடன் திருப்தியடைய வேண்டியதாகி விட்டது. இந்த நிலையில் இளைஞர் அணி, மகளிர் அணி மற்றும் கொ.ப.செ. பொறுப்புகளுக்கு செயலாளர்களைப் போடுவதிலும், குடும்ப உறுப்பினர்களின் மோதல் காரணமாகத் தடுமாற்றம் நிலவுகிறது. தயாநிதி மாறன் தனக்கு எதுவும் கட்சிப் பொறுப்பு வேண்டாமென்றும், தில்லியைப் பொறுத்தவரை தாம் 'மட்டுமே' தி.மு.க. பிரதிநிதியாக அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் சொல்கிறாராம். இடைக்காலத்தில் அந்த இடத்தைப் பிடித்துவிட்ட கனிமொழி, அதற்கு 'நோ' என்று சொல்கிறாராம். சபாஷ் சரியான போட்டி!

- ஸ்ரீநி

**மேஷம்:** ஆடை ஆபரணப் பொருட்கள் சேரும். உத்தியோகத்தில் வேலைப் பளு. பூர்வீகச் சொத்தில் பாகப்பிரிவினை. புதிய தொழில் முயற்சியில் பலன் கிட்டும். **ராசி யான எண் :** 1, 3, 9. **நிறம் :** மஞ்சள், நீலம். **கல்:** கனக புஷ்பராகம், பவளம். **இஷ்ட தெய்வம் :** சிவன், குருவழிபாடு. **பரிகாரம் :** செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி தோறும் நவக்கிரக வழிபாடு.

**ரிஷபம்:** பண வருவாய் அதிகரிப்பு. திருமணக் காரியம் கைகூடுதல். வியா பாரத்தில் நல்ல அபிவிருத்தி. தந்தை வழியில் சொத்து. வெளிநாடு செல்லும் யோகம். **ராசியான எண் :** 1, 5, 6, **நிறம் :** பச்சை, மஞ்சள். **கல் :** நீலம், வைரம். **இஷ்ட தெய் வம் :** ஆஞ்சநேயர், பெருமாள். **பரிகாரம்:** தேவை இல்லை.

**மிதுனம்:** எதிலும் எச்சரிக்கையுடன் செயல்படுவது நல்லது. வாகனங்களில் செல்லும்போது உஷார். கைப்பொருள் மீது கவனம் தேவை. திருமணக் காரியம் தாமத மாகும். **ராசியான எண் :** 1, 5. **நிறம் :** பச்சை, சிவப்பு. **கல் :** மரகதம், புஷ்பராகம். **இஷ்ட தெய்வம்:** ஆஞ்சநேயர். **பரிகாரம்:** செவ்வாய், வியாழன், வெள்ளிக் கிழமைகளில் நவக்கிர கங்களை, பூ வைத்து வழிபடுதல்.

**கடகம்:** தடைப்பட்டு வந்த திருமணம் கைகூடும். எதிர்ப்புத் தொல்லை விலகும். வீடு, மனை வாங்கும் யோகம் அமையும். தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி கிட்டும். **ராசியான எண்:** 1,5,9. **நிறம்:** சிகப்பு, மஞ்சள். **கல் :** புஷ்பராகம், முத்து. **இஷ்ட தெய்வம்:** முருகன், குரு. **பரிகாரம்:** ராகு, கேது, சனி வழிபாடு.

**சிம்மம் :** பலமான எதிர்ப்புகள் இருக்கும். கடன் சுமையால் பணத் தேவைகள் அதிகரிப்பு. வழக்கு தாமதம். உடல் நலனில் அக்கறை தேவை. உடைமைகள் மீது கவனம். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். **ராசியான எண்:** 1, 5, 6. **நிறம் :** மஞ்சள், பச்சை. **கல் :** மாணிக்கம். **இஷ்ட தெய்வம் :** குரு, முருகன். **பரிகாரம்:** சனி, குருவுக்கு அந்தந்தக் கிழமைகளில் தீபம் ஏற்றி வழிபடுதல்.

**கன்னி :** சில அற்புதமான நல்ல காரி யங்கள் நடக்கும். மேல் நாட்டுக்குச் செல்லும் யோகம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம். உடல் நிலை சீராகும். பூர்விகச் சொத்து வந்து சேரும். புதிய தொழில் முயற்சியில் பலன். **ராசியான எண் :** 5,6. **நிறம் :** பச்சை, வெள்ளை. **கல் :** மரகதம், வைரம். **பரிகாரம் :** செவ் வாய், வெள்ளி, சனி நவக்கிரகங்களுக் குத் தீபம் ஏற்றி வழிபட சங்கடங்கள் தீரும்.

**துலாம்:** நீண்ட நாள் வழக்கு முடிவுக்கு வரும். தடை விலகி, திருமணம் கைகூடும். சிலருக்கு வீடு மாற்றம்; வேலை மாறுதல். நண்பர், உறவினர் மூலம் மனசஞ்சலம் தீரும். **ராசியான எண்:** 5, 6. **நிறம்:** சிவப்பு, பச்சை, நீலம். **கல் :** வைரம், நீலம்.




**இஷ்டதெய்வம்:** ஆஞ்சநேயர், பெருமாள். **பரிகாரம்:** செவ்வாய், வெள்ளி, வியாழன் தோறும் நவக்கிரகங்களுக்குத் தீபம் ஏற்றி வழிபடுதல்.

**விருச்சிகம்:** நீண்ட நாள் வியாதி குணமாகும். மேல்படிப்புக்கு வெளிநாடு செல்வீர்கள். மேல்நாட்டு மனிதர்களின் மூலம் நல்ல தகவல் வரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி. **ராசியான எண் :** 1,3,9. **நிறம்:** மஞ்சள், சிவப்பு. **கல் :** கனகபுஷ்பராகம், முத்து. **இஷ்டதெய்வம் :** பெருமாள், குரு. **பரிகாரம்:** சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயருக்கு துளசிமாலை சாற்றி வழிபடுதல்.

**தனுசு:** தற்புகழ்ச்சி பலவீனமாக்கும். திருமணக் காரியம் நிறைவேறும். வழக்கிலிருந்து விடுதலை, வீடு மாற்றம் உண்டாகும். நிலுவைகள் வந்து சேரும். இல்லற வாழ்வு இனிக்கும். வேலை வாய்ப்பு கிட்டும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். **ராசியான எண்:** 1, 3, 9. **நிறம் :** மஞ்சள், சாம்பல். **கல் :** புஷ்பராகம், ரூபி. **இஷ்டதெய்வம் :** முருகன், சிவன். **பரிகாரம்:** ராகு, கேது வழிபாடு.

**மகரம்:** நீண்டகாலக் கஷ்டம் முடிவுக்கு வரும். தடை விலகி, திருமணம் கைகூடும். பணத் தேவைகள் பூர்த்தியாகும். மனக்கசப்பு விலகி கணவன்-மனைவி இணைவர். எதிர்ப்புகள் விலகும். **ராசியான எண் :** 5, 6. **நிறம் :** நீலம், பச்சை. **கல் :** வைரம், நீலம். **இஷ்டதெய்வம் :** மகா விஷ்ணு. **பரிகாரம் :** வெள்ளி,சனி, செவ்வாய், வியாழன் தோறும் நவக்கிரக வழிபாடு.

**கும்பம்:** இந்த வாரம் நிறைய செலவுகள் காத்திருக்கின்றன. வெளியூர் பிரயாணம் வந்து சேரும். பணப் பிரச்னை தீரும். வராத நிலுவை வந்து சேரும். சத்ரு தொல்லை இருக்காது. மனோபயம் விலகும். கல்வி வளம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில்

# நடக்குமென்பார்; நடக்கும்!



17.01.09 வரை

நல்ல வருவாய் கிட்டும். வாகன சுகம் ஏற்படும். **ராசியான எண்:** 5,6,1,3. **நிறம்:** மஞ்சள், சாம்பல். **கல் :** கனகபுஷ்பராகம். **இஷ்டதெய்வம்:** பெருமாள். **பரிகாரம் :** குரு, சனி வழிபாடு செய்து வரவும்.

**மீனம்:** இந்த வாரம் வெற்றிக் கனிகளைப் பறிப்பீர்கள். உத்தியோகத்தில் நல்ல பெயர் கிட்டும். ஊதிய உயர்வு உண்டாகும். சத்ரு தொல்லை விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். தெய்வ சங்கல்பம் நிறைவேறும். **ராசியான எண் :** 1, 3, 9. **நிறம் :** மஞ்சள், வெள்ளை, **கல்:** கனக புஷ்பராகம், பவழம். **இஷ்டதெய்வம்:** பெருமாள், முருகன். **பரிகாரம்:** ராகு, கேது வழிபாடு.



''பொங்கலோ, பொங்கல்'' என்ற உற்சாகக் கூக்குரல்கள் நம்மை சென்னை அண்ணாசாலையில் உள்ள Aalim Muhammed Salegh College of Physiotherapyக்குள் அழைத்தன.

''பொங்கல் என்பது நம் தமிழர்களோட முக்கியமான பண்டிகைங்க. இதுல மன வேற்றுமைகளுக்கோ, மத வேற்றுமைகளுக்கோ கொஞ்சம்கூட இடம் கிடையாது'' என்ற ஒரு தத்துவார்த்தமான குட்டிப் பேச்சோடு தங்களது பொங்கல் கொண்டாட்டத்தின் மலரும் நினைவுகளில் திளைக்க ஆரம்பித்தார் தினேஷ். ''என் அம்மா ஒரு தோட்டப் பிரியைங்க. வருஷாவருஷம் பொங்கல்ல ஆரம்பிச்சு கரும்புச் செடிகளை ஆசைஆசையா நட்டு வைப்பாங்க. அது அடுத்த பொங்கலுக்குள்ள ஜோரா வளர்ந்து நிற்கும். அப்படித்தாங்க ஒரு ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி ஜம்முன்னு இருபது கரும்புச் செடிகள் எங்க வீட்டுத் தோட்டத்துல வளர்ந்து



முறையூர்தாங்க எங்க ஊர். சுமார் ஐம்பது குடும்பங்களும் சேர்ந்து ஒரே இடத்துல பொங்கல் வெச்சுக் கொண்டாடுவோம். நான் ஆறாம் வகுப்புப் படிக்கும் போது நடந்த ஒரு ஜல்லிக் கட்டுச் சம்பவத்தை



# கடவுளுக்கு கரும்பு ஜூஸ்!

இருந்துச்சு. தினம் அதைப் பார்த்துப் பார்த்து நாங்கள்லாம் சந்தோஷப்பட்டுக் கிட்டு இருந்தப்போ கரெக்டா பொங்கலுக்கு முந்தின நாள் அத்தனையுமே திருட்டு போச்சு. அந்தக் கரும்புகளை நாங்க எப்ப எங்க தோட்டத்திலேயே பார்க்கிறோமோ, அன்னிக்குதாங்க எனக்கு உண்மையான காணும் பொங்கல்'' என சென்டிமென்ட் டச் கொடுத்தவரை, ''கரும்பு தொலைச் சதுக்கே இவ்வளவு ஃபீலிங்லா... தாங் காதுப்பா தாங்காது'' என்றபடியே, ''மதுரைக்குப் பக்கத்துல இருக்கற

ஜென்மத்துக்கும் மறக்கவே முடியாது... என்னோட உறவுக்காரர் ஒருத்தர் செமையா பாவ்லா காட்டிக்கிட்டே, 'நான்தான் உண்மையான மதுரை வீரன். ஜல்லிக்கட்டுல ஜெயிக்கக் காட்டறேன் பாரு'னு சத்தம் போட்டுக்கிட்டே மாட்டு கிட்ட போனாரா, மாடு திடீர்னு ரூட் மாறி இவரைத் துரத்த ஆரம்பிச்சிடுச்சு. கடைசில இவர் ஓட இவர் பின்னால மாடு ஓடி வரன்னு ஒரே கலாட்டா தான்... ஒரு மரத்துகிட்ட போய் இவர் நின்னதும் மாடும் நேருக்கு நேரா இவர்கிட்ட வந்து இவர் போட்டிருந்த பச்சை சட்டையை மட்டும் கிழிச்சுத் துப்பிட்டு கிளம்பியே போச்சு'' என மூச்சுவிடாமல் பேசி முடித்தார்

ஷபானா.

"யம்மாடியோவ்... மாடு பச்சை சட்டையைப் பார்த்துட்டுப் போச்சு. ஆனா... ஒரு சினிமா தியேட்டருக்குள்ள ஆங்கிலம் தெரிஞ்ச ஒரு மாடு நுழைஞ்சு, அங்க இருக்குற கதவைப் போட்டு 'டப்'புன்னு கடிச்சிடுச்சாம்... ஏன்னு சொல்லுங்க பார்ப்போம்?" என்றபடியே சுதா அதற்கான விடையையும் சட்டெனக் கொடுத்தார். "ஏன்னா கதவுலதான் Pull (புல்)ன்னு எழுதியிருந்ததே"



எனச் சொல்ல "மாடு கதவைக் கடிச்சதை விட நீ கடிச்ச இந்தக் கடி தாங்கல..." என்றபடியே திலகர், "ஏன் பொங்கல்னதும் மாட்டுப் பொங்கலைப் பத்தி மட்டுமே பேசறீங்க. இந்தப் பொங்கலுக்கு முதல் நாள் போகி போகின்னு ஒண்ணு கொண்டாடுவாங்களே அதை மறந்துட்டீங்களா? அன்னைக்கு வீட்ல இருக்கிற பழைய பொருட்களை எல்லாம் தேடிப் பிடிச்சு கொளுத்துவோம் இல்லீங்களா... என் நண்பன் ஒருத்தன் அப்படித்தான் வீட்ல இருந்த பாடப் புத்தகத்தை எல்லாம் சத்தம் போடாம போகிக்குக் கொளுத்தி வாங்கிக் கட்டிக் கிட்டான் அவங்க அப்பாகிட்ட" என அப்பாவியாய்ச் சொல்ல, "ஓஹோ போகியை இப்படி எல்லாம்கூடக் கொண்டாடலாமா?" என்றபடி மோஹன ப்ரியா, "ஒரு காலத்துல ஏகப்பட்ட கரும்புகளை முழுசா அப்படியே சாமிக்குப் படைச்சுக் கொண்டாடுவோம். அப்புறம் என்னாச்சு துண்டு துண்டா கரும்புகளை வெச்சுக் கொண்டாடினோம். இப்போ மாடர்ன் காலம். இப்ப எப்படி தெரியுமா பொங்கல் கொண்டாடறோம்? வெறும் கரும்பு ஜூஸைக் காட்டித்தான்" என பொங்கலுக்கு ஒரு புது விளக்கம் கொடுத்தார்.

"ஆயிரம்தான் சொல்லுங்க... மொட்டை மாடில சும்மா ஒரு இருபது வீடுகளைச் சேர்ந்தவங்களும் ஒட்டு மொத்தமா சூரியனுக்குப் பொங்கலைக் காமிச்சுக் கொண்டாடற பொங்கல் இருக்கே... அதுதாங்க சூப்பர். அன்னைக்கு விதவிதமான பொங்கல் ரைஸா சாப்டுட்டு சூரியனே ஒரு மாதிரி ஆயிடுவாரு..." என்றார் வித்ய கலா.

"டியர் தோழர்களே, நல்ல ஜோரா மாட்டுப் பொங்கலைக் கொண்டாடுங்க. மாடுகளுக்கு சூப்பரா பெயின்ட் அடிச்சு விடுங்க. முடிஞ்சா அப்படியே மாட்டு வண்டில நீங்களும் ஏறி ஊரை ஜோரா சுத்திப் பாருங்க. திரும்பி மாடு உங்களுக்கு டின் டின்னா பெயின்ட் கொடுத்தா திருப்தியா வாங்கிக்குங்க. காணும் பொங்கல்னா சும்மா சும்மா பீச்சு பக்கம்தான் போகணும்னு நினைக்காம, நம்ம புத்தகங்களையும் புரட்டிப் பார்த்து புத்தகங்களை நாம் காணும் பொங்கல்னு கொண்டாடுங்க. பொங்கலோ பொங்கல்... மாட்டுப் பொங்கல்..." என்ற வாழ்த்து கரகோஷத்துடன் விடை அளித்தவர்களை திரும்ப நாமும் வாழ்த்திவிட்டு விடைபெற்றோம்.

**- நளினி சம்பத்குமார்**

# குழந்தையில்லா தம்பதிகள் கருத்தரித்து குழந்தை பெற முக்கூட்டு மருத்துவ சிகிச்சை

இதுவரை குழந்தை பெறாத தம்பதிகள் கருத்தரித்து குழந்தை பெற ஹோமியோபதி, சித்த, ஆயுர்வேத மருந்துகள் மூலம் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளிக்கிறோம். உயிரணு உற்பத்தி இல்லாத ஆண்களுக்கு உயிரணு உற்பத்தி செய்தும், உயிரணு உற்பத்தி குறைவாக உள்ளவர்களுக்கு உயிரணு உற்பத்தி அதிகரிக்கச் செய்தும், ஆண் தன்மை உண்டாக்கியும், அதுபோல் பெண்களுக்கு மாதவிடாய் குறைபாடுகளை ஒழுங்குப்படுத்தியும், கருமுட்டை உண்டாக்கியும், வெடிக்கச் செய்தும், கருக்குழாய் சதை அடைப்பு நீக்கியும், கருப்பையிலும், ஓவரியிலும் உண்டாகும் கட்டிகளை கரைத்தும் முக்கூட்டு மருந்துகளின் சிகிச்சையினால் 100–க்கு 90% வெற்றிகரமாக குழந்தை பிறக்கச் செய்கிறோம். நீங்களும் குழந்தை பெற கீழ்க்கண்ட டாக்டர்களை அணுகவும்.

**Dr. A. அர்ஜுனா, Dr. V.A. ஆண்டாள் அர்ஜுனா, Dr. M.A. சரவணா.**



**நவீன வைத்தியாலயா** ப.எண். 9, பு.எண். 65, 100 அடி ரோடு, வடபழனி, சென்னை–600 026. போன்: 044–23623464. சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய நாட்களில் டாக்டர்களை இங்கு சந்திக்கலாம்.

மற்ற நாட்களில் எண். 27 & 30, பிராமணர் தெரு, **வந்தவாசி** (திருவண்ணாமலை மாவட்டம்) முகவரியில் சந்திக்கலாம். போன்: 04183–228077, 225208. செல்: 94430 36522 / 99437 89512. மேலும் விபரங்களுக்கு:

இ-மெயில் : drarjuna@naveenainfertilityhospital.com

வெப்சைட் : www.naveenainfertilityhospital.com

''சிலம்பாட்டம். சமீபமா வெளிவந்து ஓடிட்டு இருக்கற திரைப்படம். படம் முடியறவரைக்கும் பொறுமையா உக்காந்து பார்த்தேன். சிலம்பு ஆடுறதா ஒரு சீன்ல கூட வரல. ஏன்யா... இந்தப் படத்துக்கு இந்தப் பேருன்னு விசாரிச்சேன். அந்த சிலம்பரசன் போடுற ஆட்டம் பாட்டம்தான் 'சிலம்பாட்டம்'னு வெவரம் தெரிஞ்சவங்க சொன்னாங்க. மண்டை காய்ஞ்சு போச்சு, தமிழகத்துல சிலம்பாட்டக் கலையோட நெலவரமும் இப்படித்தானே ஆகிப் போச்சு!'' என அங்கலாய்க்கிறார் சிலம்பாட்டக் கலை வல்லுநரான தொழுவூர் கோ.குணசேகரன் ஆசான்.



* சிலம்பாட்ட சிஷ்யர்கள்

''சிலம்பாட்டம் ஒரு தற்காப்புக் கலை மட்டுமல்ல, தலை சிறந்த தேகப் பயிற்சியும் கூட. தினசரி பதினைந்து நிமிடங்கள் கம்பு சுழற்றிச் சிலம்பாடினால் போதும். உடல் பருமனை ஓடஓட விரட்டி விடலாம். இரத்தக் கொதிப்பு, சர்க்கரை நோய் போன்ற அச்சுறுத்தும் இன்னல்களை பதினாறு வீடு கட்டிப் புரட்டி எடுக்கலாம். முன்பு கிராமக் கலையாக இருந்த சிலம்பாட்டம், இன்று ஏதோ மியூசியத்துல இருக்கிற பொருள் மாதிரி ஒரு மூலையில் முடங்கிப் போய்க் கிடக்கிறது'' என்று சொல்லும் குணசேகரன், தமது சிலம்பாட்ட வரலாற்றை சிலாகித்துக் கொண்டார்.



* பயிற்சியின் போது...

''எங்க வூட்ல ஒரே பையன் நானு. ரொம்ப மெலிஞ்சு இருந்திருக்கேன். எல்லாரும் நோஞ்சான்னுதான் கூப்பிடுவாங்க. வெவரம் தெரியாத வயசுலேயே எனக்கு அது, வேகத்தை உண்டுபண்ணுச்சு. அதனால என்னோட ஆறேழு வயசுல குத்து வரிசை கத்துக்கப் போய்ட்டேன். சொக்கலால் பீடி மாதிரி பாடிய வெச்சுக்கிட்டு இது உனக்குத் தேவையான்னு கேட்டாங்க. 'திட்டத் திட்ட நான் திண்டுக்கல்'னு சொல்லிட்டு குத்து வரிசை, பிடி வரிசை எல்லாம் கத்துகிட்டேன்.

அதுலேருந்து அப்படியே சிலம்புக்குத் தாவினேன். எந்தெந்த ஊர்ல சிலம்பாட்டம் நடக்குதோ அங்ஙனப் போயி வேடிக்கை பார்த்தேன். ஒவ்வொருத்தரோட அசைவுகள், நுணுக்கங்களை மனசுல பதிய

வெக்கக்கிட்டேன். மத்த ஊர்ல இருக்கற சிலம்பு வாத்தியார்கள்ட்ட அந்தப் பாட நுணுக்கங்களைக் கேள்வி ஞானமா தெரிஞ்சுக்கிட்டேன். அப்புறம் ஊர்ல வந்து சிலம்பு சுத்த ஆரம்பிச்சேன். பதிமூணு வயசுல தனியா நின்னு சிலம்பு விளையாடத் துவங்கினேன். அப்பவே

# ஆடு கட்டலாம் வர்றீங்களா?

எஞ்சோட்டுப் பயல்களுக்கு சிலம்பு சுத்துக் கொடுத்தேன். இதுவரைக்கும் என்கிட்ட முன்னூறு பேருக்கும் மேல சிலம்பு பயிற்சி எடுத்துட்டுப் போயிருக்காங்க. முந்தியெல்லாம் கிராமத்துத் திருவிழாவுல சிலம்பாட்டம் நிச்சயம் இருக்கும்! இப்ப கொறைஞ்சு போச்சு. கிராமியக் கலைகளை ஊக்குவிக்கணும்னு ஊராட்சிகள்ல சிலம் பாட்டப் போட்டிகள் நடத்துவாங்க. இப்ப அதெல்லாம் இல்ல. சிலம்பாட்டத்துல ஒருத்தர், ஒரு திசைக்கு நாலு வீடுன்னு மொத்தம் பதினாறு வீடு கட்டி ஆடினா, அவரை யாரும் நெருங்க முடியாது. அத்தினி வலிமையானது சிலம்பாட்டம்.

சென்னை சங்கமம் 2007 விழாவுல எனக்குத் தொடர்ந்து மூணு நாளு வாய்ப்பு தந்தாங்க. சென்னை மாநகரின் முக்கிய இடங்கள்ல சிலம்பாட்டம் ஆடினது, எங்களுக்கெல்லாம் ரொம்பவும் மகிழ்ச்சியா இருந்தது.

தமிழனின் வீர விளையாட்டான சிலம் பாட்டக் கலைக்கு புத்துயிர் வரணும்'' எனக் கூறுகிறார், வலங்கைமான் அருகே வசித்து வரும் கோ.குணசேகரன் ஆசான்.

செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



★ கோ.குணசேகரன்



hyperemesis gravidarum என்றழைக்கப்படும் ஒரு நிலைமைக்குக் கூட சிலரைக் கொண்டு விட்டுவிடும். மருத்துவமனையில் அனுமதித்து அதற்குத் தகுந்த சிகிச்சை அளித்தால்தான் இது சரியாகும்.

'நாம் கர்ப்பமாக உள்ளோம்; அதனால் நமக்கு நிச்சயம் வாந்தி வந்துகொண்டே தான் இருக்கும்' என்ற ஒருவித மனநிலையினால் (mind set)தான் பெரும்பாலும் வாந்தி வருகிறது. அதனால்தான் மாமியார் வீட்டிலிருந்து அம்மா வீட்டுக்கோ அல்லது வேறு ஒரு முற்றிலுமான மாற்றம் தரும் சூழலுக்கோ அவர்களை போகச் சொல்கிறோம். இரட்டைக் குழந்தைகளைக் கர்ப்பத்தில் தாங்கி இருப்பவர்களுக்கும்,

# தெய்வத்தைச்

***கர்ப்ப காலம் என்பது ஒரு பெண்ணின் வாழ்வில் மிகவும் பிரத்யேகமான காலகட்டம். அவள் மட்டுமே அனுபவிக்கும் அலாதியான ஆனந்தத்தின் ஊடே அக்கறைமிக்க கவனிப்பும், பராமரிப்பும் அப்பருவத்தில் தேவை என்கிறார் டாக்டர் சாமுண்டி சங்கரி.***

''கர்ப்பகாலத்தை நாங்கள் மூன்று கட்டங்களாகப் பிரித்து மூன்று trimesters என்று சொல்லுவோம். இந்த முதல் trimester என்பது கர்ப்பம் தரிக்க ஆரம்பித்த நாள் முதல் வரக்கூடிய முதல் மூன்று மாதங்கள். இந்தக் காலகட்டத்தில்தான் அதிகளவு வாந்தி, தலைசுற்றல் போன்ற உபாதைகள் ஒரு பெண்ணுக்குத் தோன்ற ஆரம்பிக்கும். இந்த வாந்தியே பல சமயம்

டீன் ஏஜிலேயே கர்ப்பம் தரிப்பவர்களிடமும் இந்த வாந்தி போன்ற உபாதைகள் சற்று அதிகளவில் காணப்படும். எண்ணெயில் பொரித்த உணவுகளை உட்கொள்ளாமல், சிறு சிறு இடைவெளியில் கொஞ்சம் கொஞ்சமாக உணவு எடுத்துக் கொள்வது மற்றும் சத்தான ஜூஸ் வகைகள், பால், மோர் போன்றவற்றை அருந்துவது, இஞ்சி சேர்த்த உணவு வகைகளை உட்கொள்வது போன்றவை வாந்தியைக் கட்டுக்குள் கொண்டு வரும்.

இரண்டாவது trimesterல் பெரும்பாலும் கர்ப்பப்பை வாய் விரிவடையக்கூடிய அபாயம் சிலருக்கு ஏற்படும். இதைத் தடுக்கவே cervical encirclage என்றழைக்கப்படும் தையல் போடுவோம். toxo plasmosis



என்றழைக்கப்படும் செல்லப் பிராணிகளின் கழிவுகளை மிதிப்பதால் ஏற்படக்கூடிய ஒரு விதத் தொற்று நோயும், இந்தக் காலகட்டத்தில் வருவதற்கு வாய்ப்பு அதிகம்.

மூன்றாவது trimesterல் Pregnancy Induced BP எனப்படும் தற்காலிக பிளட் பிரஷர், திடீரென வரக்கூடிய டயாபடீஸ் போன்றவை உருவாகும்.

பொதுவாகவே ரத்தசோகை, folic acid deficiency போன்றவை கர்ப்பகாலத்தில் வராமல் தடுப்பதற்காக நல்ல சத்தான உணவுகளை உட்கொள்ள வேண்டும். அதிக அளவில் கீரை வகைகள், பேரீச்சம்பழம், பருப்புக்களை அன்றாட உணவில் சேர்த்துக்கொள்வது மற்றும் omega 3 என்றழைக்கப்படும் அவசியமான கொழுப்புச்சத்து நிறைந்த உணவு வகைகளை எடுத்துக் கொள்வது தாய், சேய் இருவரின் ஆரோக்யெத்துக்குமே நல்லது'' என்கிறார் டாக்டர் சாமுண்டி சங்கரி.

"முழு கர்ப்ப காலம் முடிவுறும் முன் பிறக்கும் குழந்தைகளை premature baby என்று சொல்லுவோம். இப்படிப் பிறக்கக் கூடிய குழந்தைகளுக்கு சுவாசக் குழாய்கள் அவ்வளவாக விரிவடையாத ஒரு நிலை இருக்கும். அதனால் இவர்கள் மூச்சு விடவே கொஞ்சம் சிரமப்படுவார்கள். Respiratory Distress Syndrome என இதை அழைப்போம். Incubator, Ventilatorக்குள்ளேயே இந்தக் குழந்தைகளை வைத்துப் பாதுகாப்போம். எப்பொழுதும் ஒரு கதகதப்பிலேயே இவர்களை வைத்துக் கொள்வது அவசியமாகும். சட்டென இவர்களது உடல் குளிர்ச்சி ஆகிவிடும். நல்ல மருத்துவமனையில் neonatal ICU care-ல் 1 கிலோ எடைக்குக் கீழே அதாவது 700 கிராம் எடையுடன் 26 வாரங்களிலேயே பிறந்த குழந்தையைக் கூட நல்லபடியாகக் காப்பாற்ற முடியும்'' என்று தகவல் அளிக்கிறார் டாக்டர் சாமுண்டி சங்கரி.

# சுமக்கும் காலம்





* சாமுண்டி சங்கரி

– நளினி சம்பத்குமார்

# சேனல்



**மக்கள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் எட்டுக்கு எட்டு நிகழ்ச்சியில் அசத்தும் விடாதுகருப்பன் கிறிஸ்டோபரைச் சந்தித்தோம்...**

● நிகழ்ச்சிக்கு ஆரம்பத்தில் 'விடாது கருப்பு' என்றுதான் பெயர் இருந்தது. இன்றைய அரசியல்வாதிகளின் மிகைப்படுத்தப்பட்ட மேடைப் பேச்சை கிராமத்துக் கருப்பாகக் கிண்டலடிக்கும் கேரக்டர் எனக்கு. எந்த வி.ஐ.பி.யையும் விடாது விமர்சிக்கும் என் கேரக்டரின் பெயரையே எனது பெயராக மாற்றியது ரசிகர்கள்தான்.

● தற்சமயம் மக்கள் தொலைக்காட்சியில் சவுண்ட் என்ஜினியராக இருக்கிறேன். திருச்சியில் கலைக்காவேரி கலைத் தொடர்பு மையத்தில் பல ஆண்டுகள் பணியாற்றியதுதான், என் வாழ்க்கையில் பல்வேறு கலாசாரங்களை அறிமுகப்படுத்தியது. தமிழகத்தின் பாரம்பரியக் கலைகளை, உலகத்தின் பல்வேறு நாடுகளுக்குக் கலைநிகழ்ச்சிகளின் வாயிலாகக் கொண்டு செல்லும் மையம் அது. அங்கே பொறுப்பில் இருந்த அருட்தந்தை ஜார்ஜ் அடிகளார் என்னுடைய திறமையை வெளிக்கொணர்வதில் முக்கியப் பங்காற்றினார். கடந்த 93ம் வருடம் வாடிகன் நகரத்தில் அப்போதைய போப்பாண்டவர் இரண்டாம் ஜான்பால் முன்னிலையில், செயின்ட் பீட்டர் தேவாலயத்தில், பரதநாட்டியம் மூலமாக பைபிளின் கருத்துக்கள் சொல்லும் நிகழ்ச்சியில் சவுண்ட் என்ஜினியராகப் பணியாற்றினேன். என் வாழ்க்கையில்

# VIP - களை



* கார்மல்

இந்நிகழ்ச்சியின், தலைமை துணைத் தலைவர் கார்மலிடம் பேசும்போது, ''ஆண்களை ஒப்பிடும்போது, பெண்கள் செய்தித்தாள் படிப்பது, அன்றாடச் செய்தி விஷயங்களில் ஆர்வம் செலுத்துவது குறைவாகத்தான் உள்ளது. பெண்களும் அன்றாட நிகழ்வுகளைத் தெரிந்துகொண்டு விழிப்புணர்வு பெற வேண்டும் என்ற நோக்கில்தான் நகைச்சுவை மூலமாக விடாது கருப்பனாக வழங்குகிறோம். எட்டுக்கு எட்டில் விடாது கருப்பன் மட்டுமில்லாமல் தோல்பாவைக் கூத்து, கவிதை வாசிப்பு, குறுக்கும் நெடுக்கும் என்று பல்வேறு தலைப்புகளில்

இதுவரையும், இனிமேலும் கிடைத்தற்கரிய பாக்கியமாக இதைக் கருதுகிறேன்.

● மிகவும் நேர்மையாகச் செயல்படும் அரசியல்வாதிகளுக்கு, மக்களிடையே வரவேற்பு குறைவாகத்தான் உள்ளது. அதே சமயத்தில் மக்கள் பிரச்னைகளை முன்னிறுத்திச் செயல்படும் அரசியல்வாதிகளுக்கு வரவேற்பும் அதிக அளவில் உள்ளது. உதாரணமாக, மருத்துவர் இராமதாசு அய்யா பூரண மதுவிலக்குக்கு பல்வேறு போராட்டங்கள் நடத்திய பிறகு, தமிழக முதல்வர் டாஸ்மாக் கடைகள் செயல்படும் நேரத்தைக் குறைக்க முன்வருகிறார். நியாயமான காரணங்களுக்குப் போராடும் அரசியல்வாதிகளுக்கு, மக்கள் ஆதரவு எப்போதும் உண்டு என்பதற்கு இது உதாரணம்.

● சினிமாவிலும் நடிக்கலாம்; ஆனால் புகைபிடிப்பது, மது அருந்துவது போன்ற காட்சிகள் நமது கொள்கைக்கு எதிரானவை. அந்த மாதிரி காட்சின்னா வேண்டவே வேண்டாம். குறும்படங்கள் பொருளாதாரரீதியாக எளிதில் அணுகக்கூடியவை. சினிமாவில் நடிப்பதைவிடக் குறும்படங்களில் நடிப்பதையே விரும்புகிறேன்.

● இந்நிகழ்ச்சி ஒளிபரப்பான முதல்நாள், 'இன்று மக்கள் டி.வி.யில் நான் வருகிறேன். பாருங்கள்' என்று என் குடும்பத்தாரிடம் சொல்லிவிட்டுச் சென்றேன். இரவு திரும்பியவுடன் இன்று முழுவதும் மக்கள் தொலைக்காட்சி பார்த்தோம். உங்களை டி.வி.யில் பார்க்க முடியவில்லையே என்று என் மனைவி கேட்டாள். எனது மேக்-அப்பையும் குரலையும் என் குடும்பத்தார்கூட கண்டுபிடிக்க முடியவில்லை. இதை என் கருப்பனுக்குக் கிடைத்த வெற்றியாகக் கருதுகிறேன்.

**- ராகவ்குமார்**


* சிதில்டேபம்

# விடாது கருப்பு!

அன்றாட நிகழ்வுகளை விவாதிக்கிறோம். கிட்டத்தட்ட தமிழகத்தில் அழிந்துவிட்ட மரபுக் கலையான தோல்பாவைக்கூத்தை எட்டுக்கு எட்டு மூலமாக மீண்டும் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியுள்ளோம். அரசியல், சமூகம் என்று பல்வேறு தளங்களில் நடைபெறும் நிகழ்வுகளை, பாமரனும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் வழங்குவதுதான் எங்கள் நோக்கம். எங்களுக்கென்று தனிப்பட்ட அரசியல் நோக்கம் எதுவும் கிடையாது. இந்நிகழ்ச்சியில் இடம் பெறுபவை அனைத்துமே, அன்றாட செய்தித்தாள்களின் தகவல்களின் அடிப்படையில் வடிவமைக்கப்படுபவையே'' என்கிறார்.

நெற்கதிர்கள் முற்றி சுமை தாங்காது, அதன் தாள்கள் வயலில் சாய்ந்து கிடப்பதைப் போல, காக்கும் காமாக்ஷி கையிலேயும், மன்மதனின் ஆயுதமாகவும், காம விரக்தியைச் சொல்லும் பட்டினத்தார் கைகளிலும் என எல்லாவிடத்திலும் நிற்கும் கரும்பு, அதன் பாரம் அதனாலேயே தாங்காமல் சாய்ந்திருக்கும் ஆச்சர்யத்தைப் பார்த்திருக்கிறீர்களா? ஜெயங்கொண்டம் அருகே குருவாலப்பர் கோயில் கிராமத்தில் ராஜேஸ்வரி வீட்டுக் கரும்புத் தோட்டத்தில் காணலாம்.

''போன வருஷம் பத்து ஏக்கர்ல தர்பூசணி போட்டிருந்தோம். மூணு மாசப் பயிரு. நல்லா வெளைஞ்சு வந்திச்சு. பங்குனி மாசத்துல ஒரு பத்து நாளு தொடர்ந்து மழை கொட்டிச்சு. அவ்வளவு தர்பூசணியும் அழுகிப் போச்சு. கொஞ்ச நாளைக்கு நம்ப காட்டைச் சும்மா போட்டு வைப்போம்னு முடிவு பண்ணினோம். அந்தச் சமயத்துல வேளாண் துறை அதிகாரிகள் கரும்பு சாகுபடி பண்ணுங்க. துல்லிய பண்ணையத் திட்டத்துல சேருங்க. உங்களுக்கு எல்லா வகையிலும் அது ரொம்ப லாபகரமா இருக்கும்னு சொன்னாங்க. நான், என்னோட கணவர் அப்புறம் பக்கத்துக் காட்டுக்காரங்களும் ஒண்ணாச் சேர்ந்து அந்தத் திட்டத்துல செயல்பட ஆரம்பிச்சோம்!'' எனக் கூறுகிறார் ராஜேஸ்வரி.

குறைந்தபட்சம் இருபது ஹெக்டேர் விளைநிலம். ஒரு ஏக்கர் விவசாயிகூட, இதில் வந்து இணையலாம். கிளஸ்டர் முறையில் அவர்களை ஒன்றிணைத்து, சொட்டு நீர்ப்பாசன அடிப்படையில் சற்று ஹைடெக்காக இயங்குவதே துல்லிய பண்ணையம். தண்ணீருடன் கலந்து இடுபொருள் அளிக்கும் கலம் (Fertilation Tank) அமைப்பது முதல், அனைத்து செயல்பாடுகளையும் எடுத்துக்கூறி வழி காட்டுகிறது வேளாண்மைத்துறை. பயிர் சாகுபடி மற்றும் இத்திட்டத்தின் எல்லா செலவினங்களுக்குமாகச் சேர்த்து, ஒரு ஹெக்டேர்

# இனிப்பு வரம்!



விவசாயிக்கு சுமார் எழுபதாயிரம் ரூபாய் மானியம் தந்து உதவுகின்றன மத்திய - மாநில அரசுகள்.

''சரியான அளவு. சரியான நேரம். சரியான இடம். இந்த மூன்றும்தான் துல்லிய பண்ணையத் திட்டத்தோட தாரக மந்திரம். இந்தத் திட்டம் தமிழ்நாட்டுல 2005ல தர்மபுரி மாவட்டத்துல முதன்முதலா செயல்படத் துவங்கிச்சு. தோட்டக்கலைப் பயிர்கள்ல பயன்படுத்தினாங்க. அப்படியே கொஞ்சம் மாறுதல் செஞ்சு இப்ப பணப் பயிர்களுக்கும் கொண்டு வந்தாச்சு. இதுல விவசாயிகளுக்கு தண்ணீர் செலவு குறைவு. உரச் செலவும் கம்மி. தண்ணிரோட கலந்து சரியான விகிதத்துல இடுபொருட்களை, அந்தந்தப் பயிர்களோட வேர்ப்பகுதி களுக்கே செலுத்துவதால் பயிர்கள் செழுமையாக வளருது. அதனால மகசூலும் ரெட்டிப்பாகுது. தென்னை, வாழை, கரும்புன்னு எல்லாத்துக்கும் வந்திடுச்சு இந்தத் திட்டம். இன்னும் நெல்லுக்குத் தான் வரல. அதற்கான முயற்சிகள்ல இறங்கியிருக்கு வேளாண் துறை!'' என்கிறார் பெரம்பலூர் மாவட்ட வேளாண்மை துணை இயக்குநர் விஜயகுமார்.

''சொட்டு நீர்ப்பாசன துல்லிய பண்ணைய சாகுபடி முறையில தண்ணீர் செலவு ரொம்பக் குறைவு. இதனால நிலத்தடி நீர் இருப்பு பாதுகாக்கப்படுகிறது. ரொம்ப முக்கியமானது, சாதாரணமா பம்புசெட் மோட்டார்ல ஒரு ஏக்கருக்கு தண்ணி பாய்ச்சணும்னா, ஒரு நாளைக்கு ஆறு மணி நேரம்னு ரெண்டு நாளு பாய்ச்சணும். இப்ப இதுல ரெண்டு மணி நேரம் தண்ணி பாய்ச்சினா போதும். அப்ப பத்து மணி நேர கரெண்ட்டும் மிச்சமாகுது. அந்தந்தப் பயிருக்கு வேர் களுக்கே உரம் செலுத்தறதால உரச் செலவும் கம்மியாகுது. விவசாயிக்கு இத்தனை செலவையும் கொறைச்சிட்டு, வஞ்சனையில்லாம வளருது பயிருங்க. சாதாரணமா ஒரு ஏக்கர்ல அதிகபட்சமா அறுபது டன் கரும்பு வெட்டலாம்னு சொல்றாங்க. எங்க தோட்டத்தை வந்து பார்த்த அனுபவ விவசாயிகள் பலரும், ஒரு ஏக்கர்ல எப்படியும் நூறு டன் கரும்பு வெட்டு நிச்சயம்னு சொல்லிட்டுப் போறாங்க. கேட்கவே சந்தோஷமா இருக்கு. இந்த சந்தோஷம் எல்லா விவசாயிகளுக்கும் பரவினால் அது தான் அடுத்த பொங்கல் சந்தோஷம்'' என்கிறார் ராஜேஸ்வரி.

செய்தியும், சித்திரங்களும் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



* ராஜேஸ்வரி

# சில ராஜா ராணிக் கப்பல்கள்



சுந்தரத்து மாமாவுக்குக் கத்திக் கப்பல் செய்யத் தெரியாது. கத்திக் கப்பலே செய்யத் தெரியாதபோது, ராஜாராணிக் கப்பல் எல்லாம் எங்கே செய்ய முடியும்? அதுவும் தெரியாது. 'தெரியுமா மாமா?' என்று கேட்டால், 'உனக்குத் தெரியுமா?' என்று பதிலுக்குக் கேட்பார். 'சொல்லுங்க மாமா' என்று மீண்டும் கேட்டால், நடையில் காலைத் தொங்கப் போட்டு வாசலில் மழைத் தண்ணீர் ஓடுவதையே பார்த்துக்கொண்டு இருப்பார். சுந்தரத்து மாமா செய்து விட்ட சாதா கப்பல் எல்லாம் மழைத் தண்ணீரில் நகர்ந்து நகர்ந்து போய், தெருவாசல் பக்கத்துச் சுவரில் முட்டி நிற்கும்.

என் கேள்விக்கு இவ்வளவு நேரம் பதில் சொல்லாதவர், மழைக்குள் நனைந்து சாய்ந்து கிடக்கிற ஒரு கப்பலைப் போய்க் குனிந்து எடுத்து வந்த பிறகு, என்னைப் பார்த்துச் சொல்வார். 'எல்லாத்துக்கும் எல்லாம் தெரியணும்னு என்ன இருக்கு. அவங்க அவங்களுக்குத் தேவை யானது அவங்களுக்குத் தெரிஞ்சாப் போதும்' என்று தன் தலையில் இலேசாக ஒரு குட்டு வைத்தபடி சொல்வார்.

'அதுக்கு எதுக்குக் குட்டணும்? சும்மா சொல்ல வேண்டியதுதானே' என்று சுந்தரம் மாமா கையைத் தள்ளுவேன். சுந்தரத்து மாமா குட்டினது வலிக்கவே செய்யாது. சொல்லப்போனால் வலிக்கும்படியாக ஒரு குட்டு வைக்க மாட்டாரா என்றுதான் அந்தச் சமயத்தில் தோன்றும்.

''என்ன ரெண்டு பேரும் எசலிக்கிட்டு இருக்கீங்க, ஈரத்துக்குள்ளே காலை வச்சுக்கிட்டு'' என்று அம்மா ஒரு சாக்கை நடைப்பக்கம் போட்டபடி, ''வீட்டுக்குள்ளே வரும்போது காலைத் தொடச்சுட்டு வாருங்க ரெண்டு பேரும்'' என்று

சொல்லிவிட்டுப் போனாள். சுந்தரம் மாமா சிரித்தார். மழைத் தண்ணீரில் நனைந்திருந்த கால் பாதங்களைத் தூக்கிப் பார்த்தார். சுருக்குச் சுருக்காகக் குளிர்ந்திருந்த தன்னுடைய கைவிரல்களால் என்னுடைய கைவிரல்களைக் கோத்துத் தன்னுடைய கன்னத்தில் வைத்து அழுத்தி, ''உங்க அம்மை கிடக்கா'' என்று சிரிக்கும்போது, நடுநெற்றியில் பொட்டு வைத்தது மாதிரி ஒரு பள்ளம் குழிந்து நிரம்பியது.

**சு**ந்தரத்து மாமாதான் ஃபோனில் இருந்தார்.

''குட்டி. அப்பா இருக்கானா?'' என்று கேட்டார். நான் அப்பாவைக் கூப்பிட்டேன். அடுக்களைப் பக்கம் இருந்த அம்மா, என்னைத் தொடர்ந்து அப்பாவுக்குக் குரல் கொடுத்தது ஃபோனில் அந்தப் பக்கம் கேட்டிருக்கும் போல.

வண்ணதாசன்

''என்ன உங்க அம்மை நேரத்தோடேயே ஏனம் எல்லாத்தையும் கழுவிக் கவுத்தி முடிச்சுட்டாளா இன்னைக்கு? பாத்திரம் உருளுகிற சத்தத்தைக் காணுமே'' என்று சிரித்தார்.

''பாத்திரம் உருளுதா, ரேடியோ பாடுதா, காக்கா கத்துதான்னு என்ன வேண்டாத கேள்வி. உங்க ஃபிரெண்டு வர்ற வரைக்கும் வெயிட் பண்ண வேண்டியதுதானே'' நான் சொல்லி முடிப்பதற்குள் அப்பா பாதிதூரத்தில் வந்து கொண்டிருந்தார்.

''என்ன உங்க அப்பன் வந்துட்டான் போலேயே. வேட்டியை மடிச்சுக் கட்டிக்கிட்டு நடக்க மாட்டான். டொப்பு டொப்புன்னு வேட்டி நுனி சப்தம் போடுகிறது இங்கே வரைக்கும் கேட்கு.''

அப்பாவிடம் ஃபோனைக் கொடுக்கும்போது, அப்பாவின் புறங்கை ரோமம் படும். வாங்கினவுடனே அப்பா பேச



மாட்டார். நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்த பிறகுதான் பேச்சு வரும். தேவையிருக்கிறதோ இல்லையோ, தொலைபேசி இருக்கிற ஸ்டூலின் மையத்துக்கோ ஓரத்துக்கோ இரண்டு விரற்கடையாவது அதை நகர்த்திக் கொள்வார். ''சரி.. சரி வாரேன்... நம்ம காலேஜிலேயா... ஆறு மணின்னு போட்டால் ஏழு மணி ஆகுமே நமக்குத்தான்... அவ என்னத்துக்கு? அங்கே அவ வந்து என்ன பண்ணப் போறா? சரி சரி பார்ப்போம்'' என்று அப்பாவின் இந்தப் பக்கத்துப் பேச்சில் சுந்தரத்து மாமாவின் பேச்சை யூகித்துக் கொண்டிருந்தேன்.

''இதோ. உன்கிட்டே பேசணுமாம்!'' அப்பா நாற்காலியை விட்டு எழுந்து கொண்டார். அப்பா வைத்ததும் ரிசீவர் சற்றே அசைந்துகொண்டிருந்தது. இப்படிக் கீழே வைப்பதற்கும் கையில் கொடுப்பதற்கும் இடையில் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது.

''சொல்லுங்க மாமா''

''உங்க அப்பன் படிச்ச காலேஜை நீ பார்த்தது இல்லையே?''

''இல்லை மாமா''

''என்னிக்காவது காலேஜைப் பற்றி உன்கிட்டே பேசியிருக்கானா அவன்?''



என்னவோ சொல்லவே வந்தேன்/சொல்லாமலே வந்து நின்னேன்/வாய் வரை வார்த்தைகள் வந்தும்/தொண்டைக்குள் சுருங்கவே நொந்தேன்/

இந்த ஒரு பாடலில் கேமராமேன் டி. ராஜேந்திரன் அமைத்திருக்கும் லைட்டிங் மட்டுமே போதும் அவரின் ஒளிப்பதிவைப் பாராட்ட'' என்கிறார் 'கார்த்திகை' படத்தின் இயக்குநர் கம் இசையமைப்பாளர் வீரா.

''விக்ரமாதித்யா, விசில் படத்துக்குப் பிறகு இப் படத்தில் பேசும்படியான கேரக்டரில் நடித்திருக்கிறார். அடிப்படையில் ஒரு நாடக நடிகர் என்பதால் கேமரா பயம் என்பது துளியும்

நான் மௌனமாக இருந்தேன்.

''பேசியிருக்க மாட்டான். அவனை மாதிரி ஒழுங்காப் படிச்சுப் பாஸ் பண்ணினவங்களை விட என்னை மாதிரி உருப்படாத ஆட்கள்தான் அதையெல்லாம் ஞாபகம் வச்சிருப்போம்.'' இப்போதும் ஒன்றும் சொல்லவில்லை.

''சரி. நீ வா. வண்டி ஓட்டுகிறதுக்கு அவன் பயப்படுவான். அவனைப் பின்னால உட்கார்த்தி வச்சு, பேசாமல் நீ எடுத்துட்டு வந்திரு. சரியா?''

சுந்தரத்து மாமா சொல்லும்போது சந்தோஷமாக இருந்தது. அப்பாவை ஸ்கூட்டர் பின்னால் வைத்து, நான் ஓட்டிக் கொண்டு போகிற காட்சியைக் கற்பனை செய்ய நன்றாகத்தானிருந்தது.

எத்தனையோ தடவை இதைத் தாண்டிப் போயிருக்கிறேன். கல்லூரிகளுக்கு இந்த மாதிரி ஆர்ச் வைத்துக் கட்ட வேண்டும் என்று முதலில் யார் தீர்மானித்தார்களோ, அந்த வளைவு வழியாக நுழையும்போதே என்னவோ செய்தது. அப்பாவின் பின்னால் உட்கார்ந்திருக்காமல் ஸ்கூட்டரில் இருந்து குதித்துவிடலாம் என்று தோன்றியது. நடக்க வேண்டும். பக்கவாட்டுச் செடிகளைத் தொட்டு உரசி, இந்த வெயிலை நிழலை எல்லாம் பூசி, நீண்ட தாழ்வாரங்களில் நடந்து திரும்பி,

இல்லை. என்னுடைய ஹீரோவாக எப்படி என் மனசுக்குள் ஒருவரை வரிந்து வைத்திருந்தேனோ அப்படியே இந்தப் படத்தில் வாழ்ந்திருக்கிறார். ஊட்டியில் ஒரு பாடல் காட்சி. சட்டையில்லாத வெற்றுடம்புடன் தோன்ற வேண்டும். பனியோ ஊசி போல குத்துகிறது. எதையும் பொருட்படுத்தாமல், படத்துக்கு எது தேவையோ அப்படியே வந்து நின்றார்'' என்கிறார் வீரா. ''மாளவிகா பிரச்னை'' என்று ஆரம்பித்தால் ''நல்லதைப் பேசுவோமே'' என்கிறார். பேசுவோமே.

– கலில்



கெமிஸ்ட்ரி லேபின் அமில வாசனை நுகர்ந்து, கைகழுவுகிற குழாய்ப் பக்கத்து இட்லிப் பூச்செடியில் இருந்து பறக்கிற கருங்குருவி பார்த்துப் போய்க்கொண்டே இருக்க வேண்டும்.

அப்பாவுக்குத் தான் படித்த வகுப்பறையைப் போய்ப் பார்க்கத் தோன்றுமா? சிவப்புக் கச்சையும் வெள்ளை அங்கியும் தாடியுமாகப் போகிறவரிடம் அப்பா போய்ப் பேசினால் என்ன? தேநீர் கொதிக்கிற வாசனையும் கேக் வாசனையும் வருகிறபடிதான் இங்கேயும் காண்டீன் இருக்குமா?

சுந்தரத்து மாமாவிடம் என்றால் இவ்வளவுக்கும் பதில் இருக்கும். எதுவும் கேட்காமல் அவ்வளவும் சொல்லியிருப்பார்.

கையை உயர்த்தி வீசி, தான் இருக்கிற இடத்தைச் சுந்தரம் மாமா காட்டினார். என்னை இறக்கி விட்டுவிட்டு ஸ்கூட்டரை நிறுத்துவதற்குப் போன இடத்தில் பன்னீர்ப் பூக்கள் உதிர்ந்து கிடந்தன. அப்பா குனிந்து ஒரே ஒரு பன்னீர்ப் பூவை எடுத்து வந்து மாமாவிடம் கொடுத்தார். அப்போது தான் உதிர்ந்த பூ. மொறுமொறுவென்று காம்பும் இதழ்களுமாகப் பளீரென்று இருந்தது.

சுந்தரத்து மாமா அந்தப் பன்னீர்ப் பூவில் இருந்துதான் தன்னுடைய பேச்சைத் துவக்கினார். அப்புறம் விரல்களைப் பற்றிச் சொன்னார். படிப்படியாக தூரிகை, ஓவியம் என்று முன்வரிசையில் அமர்ந்திருந்த பள்ளிக்கூடப் பையன்களைச் சார்ந்து கொஞ்சம் பேசின பிறகு, ஓவியங்களை வரைந்து காட்ட ஆரம்பித்தார். இங்குமங்குமாக மாமா இழுத்த கோடுகளிலிருந்து காகங்கள் பறக்க ஆரம்பித்தன. கருப்புச் சிறகும் சாம்பல் கழுத்தும் பக்கவாட்டுப் பார்வையுமாக அசல் காகங்கள்.

சற்று நேரம் ஹால் அமைதியாக இருக்க, ஒரே ஒரு பையன் தன்னை மீறி, 'கா கா' என்று கத்தினதும் கைதட்டல் சரசரவென்று உயர்ந்தது. சுந்தரம் மாமா ஓவியம் பக்கமாகத் திரும்பியிருந்தார். எனக்கு அழுகை வந்தது. அப்பா கையைப் பிடித்துக் கொள்ளப் பக்கத்து நாற்காலிக்கு நீட்டினேன். அப்பா கண்ணைத் துடைத்துக்கொண்டிருந்தார்.

ஆட்டோவிலிருந்து சரோ அத்தைதான் முதலில் இறங்கினாள். சுந்தரம் மாமா இறங்கக் கொஞ்ச நேரம் ஆயிற்று. அது வரை சரோ அத்தையையே பார்த்துக் கொண்டிருந்தேன். அத்தையை எவ்வளவு

நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அத்தைக்கு ஸ்ரீவில்லிப்புத்தூர்ப் பக்கம் ஏதோ ஒரு சின்ன ஊர். ஆனால் பட்டிக்காட்டுக் களை இருக்காது. சிலை மாதிரி அல்ல. ரொம்ப நுட்பமாக வளைவும் நெளிவுமாக ஆயுள் பூராவும் உட்கார்ந்து ஒரே ஒரு கல்தூணைச் செதுக்கியது போல அத்தை இருப்பாள். தொடலாம் என்கிற மாதிரியும் தொடக் கூடாது போலவும் தோன்றும்.

''அத்தை எல்லாம் வந்திருக்காங்க'' அம்மாவுக்குச் சத்தம் கொடுத்தேன். அம்மா முடுக்குப் பக்கமாக அடுப்புக்கட்டிக்குக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். சரோ அத்தை ஏதாவது நினைத்துக் கொள்ளக் கூடாது என்று, ''அம்மா பின்னாலே வேலையா இருக்காங்க'' என்று சொன்னேன். சரோ அத்தை இலேசாகச் சிரித்தாள்.

**சுந்தரத்து மாமா குட்டினால் வலிக்கவே செய்யாது. சொல்லப் போனால் வலிக்கும்படி ஒரு குட்டு வைக்கமாட்டாரா என்றுதான் தோன்றும்.**



''இதை உள்ளே கொடும்மா'' என்று சுந்தரம் மாமா பனங்கிழங்குக் கட்டை சரோ அத்தையிடம் கொடுத்தார். அத்தை அதை வாங்காமல் நிற்கவும் என் கையில் வைத்தார். ''செவக்காட்டுக் கிழங்கு. உங்க அப்பனுக்குப் பிடிக்கும்'' என்று சிரித்தார்.

''அப்பா வெளியில போயிருக்கா. வந்திருவா. நீங்க உள்ளே வாங்க'' என்று சொன்னதும் என்னுடன் சரோ அத்தை வந்தார்கள். சுந்தரம் மாமா வெள்ளையடித்த சுவரை விரலால் தொட்டு, சுட்டு விரல் ரேகையைப் பார்த்துக்கொண்டே சொன்னார், ''பயல் நமக்குத் தொந்தரவு பண்ணுவான். ஆனாலும் நீந்தின சுண்ணாம்பு வாடையே தனிதான்'' என்று மூச்சை இழுத்தார். இன்ஹேலரை எடுத்து என்னிடம் காட்டினார்.

சரோ அத்தை பட்டாசலில் உட்கார்ந்தாள். இதற்கு மேலே வரமாட்டேன் என்கிறது போலப் பிரம்பு நாற்காலியை இறுகப் பிடித்திருப்பதைப் பார்த்ததும், நானும் பக்கத்தில் இருந்தேன்.

''அத்தையைப் பத்திரமாப் பார்த்துக்கோ'' என்று மாமா சிரித்துக்கொண்டே பின்பக்கம் போகவும் அம்மா வரவும் சரியாக இருந்தது.



''அடுப்புக் கட்டியை விட, அதைச் சுற்றித் தரையில சிந்தின காவியும் சுண்ணாம்பும் எவ்வளவு அழகு. எப்பவுமே ஒண்ணு போனா, இன்னொண்ணு இருக்கும் இல்லையா? பார்த்துட்டு வந்திருதேன்'' என்று சத்தம் நகர்ந்தது.

அம்மாவைப் பார்த்ததும் சரோ அத்தை எழுந்திருந்தார்கள். முகம் கொள்ளாமல் சிரித்தாள். அம்மா பரிசு வாங்க வருவது போலவும், சரோ அத்தை பரிசு கொடுக்கப் போவது போலவும் நின்றார்கள். பக்கத்தில் வந்ததும் அம்மா கையை அத்தை பிடித்துக் கொண்டாள்.

''சுண்ணாம்பு வெக்கையில விரல் பொத்துப் போயிருக்குமே'' என்று அம்மாவின் விரலை உருவி விட்டாள். சரோ அத்தை அப்படிச் செய்ததும், அம்மாவுக்குச் சற்று வெட்கமாக இருந்திருக்க வேண்டும். கையை மெதுவாக உருவிக்கொண்டு என்

னைப் பார்த்து, ''அப்பாவை எங்கேடி காணோம்? அத்தையும் மாமாவும் வந்திருக்காங்கன்னு கூப்பிட்டுச் சொல்லேன்'' என்று சிரித்தாள். இதைச் சொல்லும்போது சிரிக்கவேண்டிய அவசியமே இல்லை. ஒரு இரண்டு நிமிடத்தில் அத்தையும் அம்மாவும் இப்படி மாறும்படி என்ன நடந்தது?

சுந்தரத்து மாமாவைக் கேட்க வேண்டும் போல இருந்தது.

''மாமாவை செல்லுல கூப்பிடச் சொல்லேன்.'' சரோ அத்தை என்னிடம் சொன்னதும், எனக்குத் தாங்கமுடியவில்லை. ஆட்டோவிலிருந்து இறங்கி அசையாமல் நின்ற சரோ அத்தையும் இதுவும் வேறு வேறா, ஒன்றுதானா? தெரியவில்லை.

''மாமா எங்கே?'' என்று வெளியே போனேன்.

மாமா பொங்கல் விடுகிற வாசலில் கீழே உட்கார்ந்து வரைந்து கொண்டிருந்தார். சுண்ணாம்புக் கலயமும், காவி கரைத்த பெயின்ட் டப்பாவும் பக்கத்தில் இருந்தன. மாமா இரண்டு கரும்புகள் வரைந்திருந்தார்.

கரும்பின் ஒவ்வொரு கணுவும் தெறித்துப் போகிற மாதிரி இருந்தது. கரும்பின் தோகைகள் மடங்கிப் புரண்டு தொங்கிக் கொண்டிருந்தன. தொட்டால் சொரசொர வென்று கையை அறுக்கும் போல. கொஞ்சம் தள்ளிச் சூரியன். சூரியனைப் பெரியதொரு வட்டமாகவும் அதனுடைய கதிரை ஒரு மாதிரி வித்தியாசமாகவும் வரைந்திருந்தார். தரைச் சக்கரம் மாதிரி சூரியன் அந்த இடத்தில் சுழன்று நின்றது.

கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டேயிருந்தேன். ஒரு பெரிய பறவை போல சுந்தரத்து மாமா அந்தச் சூரியன் பக்கத்தில் குனிந்து இருப்பது நன்றாக இருந்தது. நான் ஒருத்தி இங்கே நிற்பதுகூடத் தெரியுமோ தெரியாதோ? என் பக்கம் திரும்பவும் இல்லை. என்னோடு பேச்சுக் கொடுக்கவும் இல்லை.

சட்டென்று நான் மாத்திரம் தனியாகி விட்டது போல இருந்தது.

''என்ன இங்கேயும் வந்து கோலப் போட்டி நடத்த ஆரம்பிச்சுட்டானா?'' ஸ்கூட்டரை நிறுத்தினவாக்கில் சுந்தரத்து மாமா தலையைச் செல்லமாக ஒரு அமுக்கு அமுக்கிவிட்டபடி அப்பா செருப்பைக் கழற்றிப் போட்டார். பையை என்னிடம் கொடுப்பார்; 'உங்களுக்குப் பனங்கிழங்கு வந்திருக்குப்பா' என்று சொல்லலாம் எனக் கையை நீட்டினேன். அப்பா என்னைக் கவனிக்கவே காணோம்.

''சரோ வந்திருக்காளா? ஆச்சரியமா இருக்கு. மழைதான் வரப்போகுது'' என்னைத் தாண்டி அப்பா உள்ளே போய்க் கொண்டிருந்தார். இலேசாக மஞ்சள் குலை வாசனை அடித்தது.

எனக்குத் தெரியும். சுந்தரத்து மாமாவுக்கு அந்த வாசனை நிச்சயம் பிடிக்கும். ●



''தலைவர் வானிலை ஆராய்ச்சி நிலையத்துக்கு மனு கொடுக்கப் போகிறாரே, ஏன்?''

''இனிமேல் அடிக்கப் போகிற புயலுக்கு 'த்ரிஷா'னு பேர் வைக்கணுமாம்!''

– அதிரை புகாரி

# அடிவாங்கிய ராஜசுந்தரம்!

12

## ரயில் ராதிகா TO ராடன் ராதிகா

பாரதிராஜா சார் படத்தில் நடிப்பது அத்தனை எளிதான விஷயமில்லை. அதிலும் ஏற்கெனவே நடித்த ஒரு காட்சியைத் திரும்பப் படமாக எடுக்கும்போது ரொம்பக் கவனமாக இருக்க வேண்டும். எப்படி அந்த இடத்தில் நின்றேன், நடித்தேன், முன்னால் செய்தது போலவே கீழே விழுந்தேன் எதுவுமே இப்போது நினைவில் இல்லை. உள்ளுக்குள் அந்த ஷாட்டைச் சரியாகச் செய்துவிட வேண்டும் என்கிற எண்ணம் ஒன்றுதான் இருந்தது. 'கடகட'வென்று காட்சி படமாக்கப்பட்டது. அந்தக் காட்சியில் நடித்து முடித்ததும், யூனிட்டில் இருந்த எல்லோரும் கை தட்டினார்கள். அப்போதுதான் நான் சரியாக நடித்திருக்கிறேன் என்பதே எனக்குப் புரிந்தது.

ஒரு பக்கம் தொலைக்காட்சித் தொடர் ஓடிக்கொண்டிருந்தது. இன்னொரு பக்கம் 'ராடன்' சார்பாக புதுப்புது நிகழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்தேன். அப்படிச் செய்த ஒரு நிகழ்ச்சிதான் 'கோடீஸ்வரன்.' எனக்கு கிரியேட்டிவிட்டி, த்ரில் இரண்டும் பிடிக்கும். அந்தச் சமயத்தில் பாராளுமன்றத் தேர்தல் வந்தது. தி.மு.க.வுக்காக இடையிடையே பிரசாரம் செய்யப் போய்க்கொண்டிருந்தேன்.

'கோடீஸ்வரன்' நிகழ்ச்சிக்கான படப்பிடிப்பு சென்னை ஃபிலிம் சிட்டியில் நடந்துகொண்டிருந்தது. அந்தத் தேர்தலில் தி.மு.க. தோற்றுப் போனது. அதற்காகவே காத்திருந்தது போல ஃபிலிம் சிட்டியில் எங்களைக் காலி பண்ணச் சொல்லிவிட்டார்கள்.

வேறு எங்காவது 'கோடீஸ்வரன்' நிகழ்ச்சியை ஷூட் பண்ணலாம் என்றால், சென்னையில் அவ்வளவு பெரிய ஏ.சி. ஃப்ளோர் எங்குமே இல்லை. அதிலும் ஃபிலிம் சிட்டியில்



* ராஜு சுந்தரம்



* ஷங்கர்



* பாரதிராஜா

நாங்கள் ஷூட்டிங்குக்காகப் பயன் படுத்திய செட், சில சென்சிட்டிவான எக்யூப்மென்ட்ஸ் வேறு எங்கும் கிடைக்க வில்லை. 'கோடீஸ்வரன்' நின்றுபோனது.

அதற்குப் பிறகுதான், இனிமேல் இந்த மாதிரி நடக்கக்கூடாது என்பதற்காக சன் டி.வி.யில் ஒரு பெரிய ஏ.சி. ஃப்ளோர் அமைத்து, செட் போட்டார்கள். அதில், 'தங்க வேட்டை' என்ற நிகழ்ச்சியை நடத்தினேன்.

எனக்குக் குறுக்கு வழிகளில் எப் போதுமே நம்பிக்கை இருந்ததில்லை. உழைப்பு. அது ஒன்று போதும். எவ் வளவு பிரச்னை வந்தாலும தாண்டிப் போய்விடலாம் என்று நினைப்பேன். அது உண்மையென்பதை இயற்கை நிரூபித்துக் கொண்டே இருந்தது.



ராதிகா

'**அ**ண்ணாமலை' அவ்வளவு ஸ்மூத் தாகப் போனது என்று சொல்ல முடியாது. என் தயாரிப்பில், நான் நடிப்பதற்கு, சண்டை போடவேண்டியிருந்தது. ஆனால் பணநெருக்கடி இல்லை. 'ராடன்' பதிவு செய்யப்பட்ட ஒரு பெரிய நிறுவனமாகி யிருந்தது.

**நா**ன் எவ்வளவோ படங்களில் நடித் திருக்கிறேன். எத்தனையோ பேரைப் பார்த் திருக்கிறேன். நிறைய இயக்குநர்களிடம் கற்றுக்கொண்டிருக்கிறேன். அந்தப் பாதிப் பும் அனுபவமும் என் வாழ்நாளெல்லாம் கூடவே வந்துகொண்டிருக்கின்றன.

**பா**ரதிராஜா சார் மிகச் சிறிய ஓர் அறை யில் படமெடுப்பார். அந்த அறையையே இரண்டு வீடாகக் காட்டுவார். வீட்டின் ஒரு பக்கத்தில் கேமராவை வைத்தால் அது 'கிழக்குச் சீமையிலே' ராதிகா வீடு. மறு புறம் வைத்தால் அது விஜயகுமார் வீடு.

இப்போது இருக்கிற இயக்குநர்களால் அவரைப் போல படம் எடுக்கவே முடி யாது. அப்போது மானிட்டர் கிடையாது. அவருடைய மனத்திலேயே படம் விரியும். எங்கே கேமராவை வைக்கவேண்டும் என்கிற கணக்கு இருக்கும். கேமரா ஓடத் தொடங்கிவிட்டால் அதற்குப் பிறகு நிறுத்த முடியாது. இருபத்தைந்து நாட்களில் பெரிய பெரிய படங்களை எடுத்து முடித்து விடுவார். அவருடைய டிசிப்ளின் இது.

**எஸ்.**பி. முத்துராமன் சாரின் டிசிப்ளின் வேறு. சாதாரண ஜனங்கள்கூட, தான் எடுக்கும் படங்களுக்கு வர வேண்டும், ரசித்துப் பார்க்கவேண்டும் என்ற கண்ணோட்டத்தோடு அவர் படங் கள் எடுத்துக்கொண்டிருந்தார்.

'ஏன் சார் இப்படி ஜனரஞ்சகமா

எனக்குப் புது அனுபவம். அந்தப் படத்தில் நடித்ததற்குப் பிறகு ஷூட்டிங் ஸ்பாட்டில் யாராவது சத்தம் போட்டால், 'என்ன பண்றீங்க? இங்க ஷூட்டிங் நடக்குது' என்று பொரிந்துவிடுவேன்.

ராடன் நிறுவனத்தில் ஒரு டிசிப்ளின் இருப்பதற்கு அந்த அனுபவங்கள் மிக முக்கியக் காரணம்.

இன்றைய இயக்குநர் ராஜு சுந்தரம் முதன் முதலில் நடித்த படம் 'ஜீன்ஸ்.' அதில் கதைப்படி ஒரு காட்சியில் நான் ராஜு சுந்தரத்தை அடிக்கவேண்டும். அதுவும் நான் சினிமாவில் கூட யாரையும் லேசாக அடிக்க மாட்டேன். நடிப்பு என்று வந்துவிட்டால் அப்படி ஒரு



பிரசாரத்தின்போது...



எஸ்.பி.முத்துராமன்



பாலுமகேந்திரா

மட்டுமே படம் எடுக்கறீங்க?' என்று கேட் டால், 'நீங்க படம் பார்க்கற கோணம் வேற. காசு குடுத்து டிக்கெட் வாங்கி சாதாரண மக்கள் படம் பார்க்கறது வேற' என்பார்.

பாலு மகேந்திரா சார் வேறு ரகம். அவருடைய ஷூட்டிங் நடக்கும் இடத்தில் சத்தமே இருக்காது. 'படம் எடுக்கறதுக்கு அஞ்சு பேரு, ஆறு பேரு போதும்' என்பார். ஆச்சரியமாக இருக்கும்.

அவருடைய 'ரெட்டைவால் குருவி' படத்தில் நடித்தது வேகம் வந்துவிடும். ஒவ்வொரு அடியும் 'தொப்பு...தொப்பு' என்று விழும்.

அன்றைக்கு எடுத்தது ஒரு ஃபுல் ஷாட். நான் பார்த்துக்கொண்டே இருப்பேன். ராஜுசுந்தரம் ஏதோ பேசிக்கொண்டே இருப்பார். என் குடும்பத்தைப் பற்றி ஒரு வசனம். 'ஏன்டா! என் குடும்பத்தைப் பிரிக்கப் பார்க்கறியா நீ?' என்றபடி நான் போய் அவரை அடிக்கவேண்டும்.

'ஏறி அடிச்சா அப்படியே மிரளணும்' என்று சொல்லியிருந்தார் இயக்குநர் ஷங்கர். கேமரா ஓட ஆரம்பித்ததும், அவர் சொன்னபடியே ராஜுவுக்கு ஓங்கி ஓர் அடி கொடுத்தேன். அவர் அப்படியே சுருண்டு விழுந்துவிட்டார்.

**(ரயில் வரும்)**

எழுத்து வடிவம்: **பாலுசத்யா**



# ஸ்ரீ பகவான் அரவிந்தர்!

1872-ம் ஆண்டு ஆகஸ்ட் 15 பகவான் ஸ்ரீ அரவிந்தர் அவதரித்த நாள். அவர் மகான் மட்டு மல்ல; சத்தியஜீவியத்தை பூமிக்கு முதன் முதலாக இறக்கிய தெய்விகர் சக்தி.

1879-ம் ஆண்டு படிப்புக்காக இங்கிலாந்து சென்ற ஸ்ரீஅரவிந்தர், 1893-ம் ஆண்டு இந்தியா திரும்பினார். இங்கே சுதந்திர வேட்கை கிளர்ந்தெழுந்த தருணம் அது. அரவிந்தரின் உள்ளத்திலும் அதே வேட்கை. அவருடைய புரட்சிகர மான கருத்துக்கள் மக்களிடம் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின. அலிப்பூர் குண்டுவெடிப்பில், அரவிந்தர் மீது ஆங்கில அரசு பொய் வழக்குப் போட்டு, ஒரு வருடம் சிறையில் தள்ளியது.

சிறையில் கிடைத்த தனிமை அவரது ஆன்ம வளர்ச்சிக்கு உதவியது. விவேகானந்தரின் அசரீரி, 'நீ முழுமையான சுதந்திரம் பெற்ற மனிதன். பூரண யோகத்தை இந்த உலகுக்கு அறிமுகம் செய்ய, பாண்டிச்சேரி செல்வாயாக' என்றது! அதன்படி 1910-ம் ஆண்டு பாண்டிச்சேரிக்கு வந்தார்.

ஆகஸ்ட் 15-ம் தேதி இந்தியாவுக்குக் அரசியல் சுதந்திரம் கிடைத்ததென்றால், அரவிந்தர் பெற்றதோ ஆன்ம சுதந்திரம்.

ஸ்ரீ அன்னையிடம் ஆசிரமப் பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டு, யோக சாதனைகளில் மூழ்கினார். அவர் யோகத்தில் மூழ்கிக் கண்டெடுத்த முத்துதான் பூரண யோகம்.

பூரணயோகம் என்பது பேரறிவு, மனிதனுக்குள் இறங்கிச் செயல்படுவதாகும். அதன் நோக்கமே மனிதனை தெய்விக நிலைக்கு உயர்த்துவதுதான்.

1934-ம் ஆண்டு அரவிந்தர் சத்தியஜீவிய சக்தியை எட்டினார்.

1950ம் ஆண்டு மண்ணுலகை விட்டுச் சென்ற அரவிந்தரின் பூத உடல், நூற்றுப் பதினொரு மணி நேரம் சத்தியஜீவிய சக்தியைத் தாங்கியிருந்தது. பின்னர் 1956-ம் ஆண்டு சூட்சம உலகிலிருந்து சத்திய ஜீவிய சக்தியை உலகுக்கு அனுப்பினார்!

''பன்னிரெண்டு யோகிகள் இந்த உலகில் சத்தியஜீவிய சக்தியைப் பெற்றாலே பூலோகம் சொர்க்கமாகும்'' என்கிறார் ஸ்ரீஅரவிந்தர்.

ஒவ்வொருவரும் ஆன்ம ஞானம் பெற்று, மனித வாழ்விலேயே இறை வாழ்வை வாழவேண்டும் என்பதே ஸ்ரீ அரவிந்தரின் தத்துவம்.

**- ஸ்ரீ அன்னை அடிகள்**

நடிகர் ரஞ்சித், 'பீஷ்மர்' படத்தைத் தொடர்ந்து, தாமே இயக்கி கதாநாயகனாக நடிக்கும் படம் 'ரயிலு'. இந்தப் படம் மலையாள இயக்குநர் லோகிதாஸின் இயக்கத்தில் 'சல்லாபம்' என்ற பெயரில் வெளியாகி மிகப் பெரிய வெற்றி பெற்றதோடு, ஏராளமான விருதுகளையும் வாரிக்குவித்தது. தெலுங்கிலும் 'எகிரே பாவுரம்மா' என்ற பெயரில் மொழிமாற்றம் செய்யப்பட்டு அங்கும் சூப்பர் ஹிட். அந்தக் கதையின் மொத்த உரிமையை வாங்கிய ரஞ்சித், வி.கே.மீடியா விஷன் என்ற நிறுவனத்துக்காக இயக்கி நடிக்கிறார்.

''என்னை எல்லாரும் திறமையான நடிகன்னு ஏத்துக்கறாங்க. ஆனா நடிக்க மட்டும் வாய்ப்பு தர்றதில்லை. அப்படியே ஒண்ணு ரெண்டு படங்கள் அமைஞ்சாலும் அதுவும் சரியா போகாததால, ரஞ்சித்னாலே ராசியில்லாதவன்னு



* 'குடியரசு' படத்தில்...

நடிகர் விக்னேஷ் 'குடியரசு' படத்துக்காக தன் பெயரை விக்னேஷ்வரன் என்று மாற்றிக் கொண்டிருக்கிறார். காரணம் கேட்டால், ''இது நம்மை துயரத்தில் ஆழ்த்திவிட்டு இறந்துபோன 'ரகுவரனுக்குச் செய்கிற மரியாதை'. அதனால் அவருடைய பெயரிலிருந்து 'வரன்' என்ற

அமெரிக்கவாழ் இந்தியர் ஹரிதாஸ், தமிழ்ப்படம் இயக்க வந்திருக்கிறார். படத்தின் பெயர் 'மீண்டும் மீண்டும்'. ''ஹாலிவுட் தரத்துக்கு தமிழில் சஸ்பென்ஸ் த்ரில்லர் இயக்க வேண்டுமென்பது என்னுடைய நெடுநாள் ஆசை. அது 'மீண்டும் மீண்டும்' படத்தின் மூலம் நிறைவேறியிருக்கிறது'' என்னும் ஹரிதாஸ், அடிப்படையில் ஒரு புரஃபஸர். அமெரிக்காவின் நியூயார்க் யுவர்சிட்டியில் பிஸினஸ் மேனேஜ்மெண்ட் போதித்தவர். இப்போது சினிமா மேனேஜ்மெண்ட் பண்ண வந்திருக்கிறார். தவிர, தான் இயக்கிய எட்டு குறும்படங்களுக்காக சர்வதேச குறும்பட விழாக்களில் விருதுகளைப் பெற்றவர். 1994-ஆம் ஆண்டு 'மூனுல ஒண்ணு' என்ற மலையாளப் படத்தை இயக்கி அந்த ஆண்டின் சிறந்த படத்துக்கான மாநில விருதினைப் பெற்றவர்.

''எனக்கு சஸ்பென்ஸ் கதை ரொம்பப் பிடிக்கும். அதனால்தான் என்னுடைய

ஆகிப் போச்சு. அந்தப் பேச்சைப் பொய்யாக்கணும்னு வெறியோட கிளம்பியிருக்கேன். நிச்சயமா ரயில் அதுக்குக் கைகொடுக்கும்'' நம்பிக்கையோடு பேசுறார் ரஞ்சித். 'ரயிலு'க்கு ஏப்ரல் 14லிருந்து க்ரீன் சிக்னலாம். ●

* 'ரயிலு' படத்தில்...



## ரயிலேறும் ரஞ்சித்!

பகுதியை என் பெயரோடு சேர்த்துக்கொண்டேன்'' என்கிறார்.

இப்படத்தின் இயக்குநர் சபரீஸ் பேசும்போது, ''காலை ஆறு மணிக்கு ஆரம்பித்து மாலை ஆறு மணி வரை ஒரு பத்திரிகையாளன் வாழ்க்கையில் நிகழும் மாற்றங்களைத்தான், இந்தப் படத்தின் திரைக்கதையாக வடித்திருக்கிறோம். நமது நாட்டின் நான்காவது பெரிய தூண் பத்திரிகை. அதனைச் சரியாகப் பயன்படுத்தும்போது நிகழும் ஆக்கபூர்வமான மாற்றங்களைப் படமாக வடித்திருக்கிறோம். அதற்காக இந்தப் படத்தில் கமர்ஷியல் விஷயங்கள் இல்லையென்று எண்ணிவிட வேண்டாம். அழகான காதல் ஒன்று வருகிறது. படத்தின் இயக்குநரான நான் உட்பட தயாரிப்பாளர் இருவரும் கிக்பாக்ஸிங்கில் நேஷனல் லெவல் சேம்பியன்ஸ். படத்தில் இடம்பெறும் 'சாமுராய்'வாள் சண்டைக் காட்சி கண்டிப்பாகப் பேசப்படும்'' என்கிறார். ●

முதல் படத்துக்கான கதையில் சஸ்பென்ஸை, காட்சிக்குக் காட்சி அதிகப்படுத்தும்படியாக இயக்கி இருக்கிறேன். குறும்படங்கள் என்பது வேறு, கமர்ஷியல் சினிமா வேறு. இரண்டுக்குமான வித்தியாசம் எனக்குத் தெரியும். தமிழ் ரசிகர்கள் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்கிறார் ஹரிதாஸ்.

**- மகிமைராஜன்**

* 'மீண்டும் மீண்டும்' படத்தில்...



## ஹாலிவுட் சஸ்பென்ஸ்!

# ஆறாவது ஃப்ளோருக்கு நிவாரணம்!

அகிலா கார்த்திகேயன்

***மழை வெள்ள நிவாரணம் ரூ. 2000 வாங்க சொந்த காரிலேயே வருவதாக மேயர் சொன்னதாகக் கேள்வி. அப்படிப் பட்ட மேல்மட்ட வெள்ளம் பாதிக்கப் பட்டவர்கள் தங்கள் பாதிப்பைப் பகிர்ந்து கொள்கிறார்கள்!***

**அம்புஜம் மாமி:** நாங்க என்னமோ நல்ல மேடான இடத்திலேதான் வீடு கட்டிண்டு இருக்கோம். இத்தனை வெள் ளத்திலும் எங்க ஏரியா கிணத்தி லெல்லாம் துளி தண்ணி ஊறலேன்னா பார்த்துக் கோங்கோ. ஆனா நவம்பர் மாதம் என் நாத்தனார் பொண்ணு கல்யாணம் மடிப் பாக்கத்திலே நடந்தது. ''ஒரே வெள்ளமா இருக்குமே அங்கேயெல்லாம்... நானும் கட்டாயம் வரணுமா?''ன்னு எங்க வீட்டுக் காரரைக் கேட்டேன். ஒரே அடமா வந்தே ஆகணும்னு இழுத்துண்டு போனார். எத்தனைதான் தூக்கிப் பிடிச்சுண்டு நடந் தாலும் கல்யாண மண்டபத்துக்குப் போகும்போது ரெண்டடி ஆழத் தண்ணி யிலே என் புடைவை எல்லாம் பாழ். எட்டாயிரம் கொட்டி வாங்கின பட்டுப் புடைவை. நாத்தனார்கிட்டேயா போய் நஷ்டஈடு கேட்க முடியும்? இதுவும் வெள்ளப் பாதிப்புதானே!

**சேலம் சேகர்:** சேலத்தில் வெள்ளச் சேதம் ஒன்றுமில்லை என்பீர்கள்! சென்னை நந்தம்பாக்கத்தில் நட்டநடு வெள்ளத்தில் என் மச்சினன் வீட்டைக் கட்டித் தொலைத்திருக்கிறான். அங்கே தூறல் போட ஆரம்பித்தவுடனேயே, என் மாமனார் மாமியாரை இதுதான் சாக்கு என்று இங்கே தள்ளிவிட்டுவிடுவான். மழை வெள்ளம் ஓய்ந்து ஒரு மாதமானா லும் இங்கிருந்து நகரமாட்டார்கள். மனைவி செய்யும் விருந்தோம்பல் பாதிப் புக்கு இந்த ரெண்டாயிரம் எம்மாத்திரம்?

**கல்யாணசுந்தரம்:** அடுக்குமாடியிலே ஆறாவது ஃப்ளோர்தான் என் வீடு. என் பையன் கல்யாணமும் மேடான பகுதி யிலேதான் நடந்தது. இருந்தாலும் இன்விடேஷன் கொடுத்த அத்தனை பேரில் பாதிப்பேர், 'எங்க ஏரியாவிலே வெள்ளம்'னு சொல்லி கல்யாணத்துக்கு வரலே. நான் இவங்க வீட்டுக் கல்யாணத் துக்கெல்லாம் போய் எழுதின மொய்யை எல்லாம் வசூல் செய்ய முடியாமப் போச்சு. கிட்டத்தட்ட நாலாயிரம் ரூபாய் மொய் இழப்பு இந்த வெள்ளத்தாலே எனக்கு. இது பாதிப்பில்லையா சொல்லுங்க!

**ஜான்ஸி:** அவ வீடு வெள்ளத்திலே மிதக்கு துன்னு எங்க வீட்டு வேலைக்காரி நாலு நாளா மட்டம் போட் டுட்டா. அதனாலே

அத்தனை வேலையும் எங்க வீட்டுக்காரரே செய்யும்படி ஆயிடுச்சு. இதனாலே அவர் சமைக்க முடியாமப் போச்சு... நாலு நாளும் ஹோட்டலிலிருந்து வாங்கிச் சாப்பிட்டதிலே எக்கச்சக்க செலவு! இந்தப் பாதிப்பை ரெண்டாயிரத்துலேதானே ஈடுகட்ட முடியும்?

**செல்லமணி:** ''நம்ம ஏரியாலே வெள்ளமே இல்லே... வெள்ளத்திலே மிதக்கிற ஏரியாவையெல்லாம் சுத்திப் பாக்கணும்''ன்னு என் பையன் ஒரே அடம் பிடிச்சான். ரொம்பச் செல்லமா வளர்க்கறோம். அதனாலே எங்க காரை எடுத்துட்டு வெள்ளப் பகுதியையெல்லாம் சுத்திக் காண்பிச்சோம். காருக்கு பெட்ரோல், ஹோட்டல்னு ஏகப்பட்ட செலவு... வெள்ளம் வராம இருந்தா இந்தச் செலவில்லே பாருங்க!

# ஜாலி ஸ்டோர்ஸ்

**கார்மேகம்:** வீட்டிலே நாலு கார் இருந்தும் எடுக்க முடியலே! வீடு என்னமோ ஸேஃபான பிளேஸ்லதான் இருக்கு. என் கம்பெனி, என் பெண் காலேஜ்ல எல்லாம் ஒரே மழை வெள்ளம். அதனாலே காரைப் பாழ்பண்ண விரும்பாம, அத்தனை நாளும் 'கால் டாக்ஸி' தான். இந்த ரெண்டாயிரம் அதுலே கால் பங்குகூட இல்லே!

என்ன... உங்களுக்கும் ஏதாவது காரணம் கிடைத்திருக்குமே! காரை எடுத்துக்கொண்டு போய் நிவாரணம் வாங்குங்கள். அது உங்கள் உரிமையாக்கும்! ●



## Voluntary

சென்னை மாநகரத்தில் சற்று ஒதுக்குப் புறமாக இருந்த அடையாறு பகுதியில் இருபத்தைந்து ஏக்கர் நிலப்பரப்பில் துவக்கப்படவிருந்த 'வாலண்டரி ஹெல்த் சர்வீசஸ்' மருத்துவமனையின் அடிக்கல் நாட்டு விழா. பாரதப் பிரதமர் நேரு வந்திருந்தார். அப்போது அடைமழை. அடிக்கல் நாட்டு விழா நடக்கும் இடத்துக்கு பிரதமர் செல்லமுடியாமல் வழியெங்கும் சேறும், சகதியுமாக இருந்தது. அடையாறு பகுதியை ஒட்டிய பள்ளிப்பட்டு கிராமத்துக்கு, அவரை ஒரு ஜீப்பில் அழைத்துக்கொண்டு போனார்கள். அங்கே ஒரு பந்தல் போட்டு, மருத்துவமனையின் அடிக்கல்நாட்டு விழா நடைபெற்றது.

இன்றைய டைடல் பார்க் செல்லும் ராஜீவ்காந்தி சாலை முகப்பில், மத்திய கைலாஷை அடுத்துள்ள வாலண்டரி ஹெல்த் சர்வீசஸ் மருத்துவமனை முன்னால் நின்றுகொண்டு, இந்தச் சம்பவத்தைச் சொன்னால் யாரும் நம்பக்கூட மாட்டார்கள்.

1961 அக்டோபரில் அடிக்கல் நாட்டப்பட்டு, சுமார் இரண்டாண்டுகளில் முதல் பிளாக் மருத்துவமனை துவக்கப்பட்டபோது நாற்பது படுக்கைகள் மட்டுமே இருந்தன. இன்று 400 பிளஸ் படுக்கைகளுடன் நரம்பியல், சிறுநீரகவியல், நீரிழிவு சிறப்புப் பிரிவு, மகப்பேறு மருத்துவம் என்று பல சிறப்புப் பகுதிகளும், பல்வேறு பரிசோதனை வசதிகளும் கொண்டு சென்னை நகரத்தின் குறிப்பிடத்தக்க மருத்துவமனைகளுள் ஒன்றாக இருக்கிறது.

''அரசு மருத்துவமனைகளில் போதிய வசதிகளும், கவனிப்பும் இல்லை; தனியார் மருத்துவமனைகளில் ஏராளமாகச் செலவாகும். அதற்கு தீர்வாக, மத்தியதர வகுப்பு மக்களுக்கு குறைவான கட்டணத்தில், நவீனமான சிகிச்சைகள் அளிக்கும் நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டதுதான் இந்த வி.ஹெச்.எஸ். மருத்துவமனை'' என்கிறார் அதன் கௌரவச் செயலாளரான டாக்டர்



முரளி.

இந்த மருத்துவமனை உருவாகப் பாடுபட்டவர்களில் மிக முக்கியமானவர் டாக்டர் சஞ்சீவி. அவரது முயற்சியின் பேரில் சென்னையின் பல முக்கிய மருத்துவர்கள், தினமும் சில மணி நேரத்தை ஒதுக்கி ஊதியம் எதுவும் பெற்றுக்கொள்ளாமல் இங்கே வந்து சேவை செய்ய முன்வந்தார்கள். அது மட்டுமல்ல; இங்கே பணியாற்றும் ஜூனியர் மருத்துவர்கள் மற்றும் இதர ஊழியர்கள்கூட சம்பளம் பெற்றுக்கொண்டாலும், சேவையாற்றும் திருப்திக்காகவும் இங்கே பணியாற்றுகிறார்கள்.

மருத்துவமனைக்கு முதன்முதலில் ஐந்து லட்சம் நன்கொடை அளித்தது சென்னை ரேஸ் கிளப். யுனிசெஃப்

Health Servi

# 50-வது ஆண்டு!








★ துவக்க விழா

# வெல்டன் வி.ஹெச்.எஸ்.!

அமைப்பு எக்ஸ்ரே உபகரணத்தை வாங்கிக் கொடுத்தது. ரோட்டரி, ரவுண்ட் டேபிள் போன்ற அமைப்புகளும், பல கார்ப்பரேட் நிறுவனங்களும் நன்கொடை அளிப்பதால் தான், இன்று இந்த அளவுக்கு வி.ஹெச்.எஸ். மருத்துவமனை வளர்ச்சி கண்டுள்ளது.

எக்ஸ்ரே எடுக்க பத்து ரூபாய்; ரத்தப் பரிசோதனைக்கு இரண்டு ரூபாய்; சிசேரியன் டெலிவரிக்கு பத்து நாள் ரூம் வாடகை, உணவு உள்ளிட்ட அனைத்துக்கு மாக கட்டணம் 3000 ரூபாய். இவர்களின் சேவையைப் புரிந்துகொண்டு மத்திய, மாநில அரசுகளும், நன்மனம் படைத்த மனிதர்களும், கார்ப்பரேட் நிறுவனங்களும் பல்வேறு வழிகளிலும் உதவிக்கரம் நீட்டு கின்றன.

தனியார் மருத்துவமனைகளில் சிகிச்சைக்குச் சேர்ந்து, ஏராளமாகப் பணம் செல வழித்தவர்கள், வி.ஹெச்.எஸ். மருத்துவ மனைக்கு வந்து அட்மிட் ஆகி நவீன சிகிச்சையால் உயிர் பிழைத்திருக்கின்றனர். மருத்துவமனை சென்னையைச் சுற்றியுள்ள சுமார் பதினைந்து கிராமங்களில் மருத்துவ மையங்களை நடத்தி வருகிறது.

இங்கே சிறப்பாகச் செயல்பட்டு வரும் இன்னொரு பிரிவு, மதுப்பழக்கத்திலிருந்து மீட்கும் சிகிச்சை மையம். இங்கே சிகிச்சை பெற்று, மதுப்பழக்கத்தை முற்றிலுமாக விட்டொழித்து வாழ்க்கையில் வளம் கண்டவர்கள் ஏராளம். அப்படி மீண்டவர்கள், சிகிச்சை மைய ஆண்டு விழாவின் போது ஒன்றுகூடி, தங்கள் அனுபவங்களை நெகிழ்ச்சியுடன் பகிர்ந்துகொள்கிறார்கள்.

– மானஸா

# காலனை அழிப்பவள்!

**வித்யா-** அவள்தான் சகல வித்யைகளாக வும் இருக்கிறாள்.

**வியதாதி ஜகத் ப்ரஸூ** - ஆகாயத்துக்கு வ்யோமன் என்று ஒரு பெயர். ஆகாயத்தின் அதிதேவதை வ்யோமன். 'வியதாதி' என்கிற போது, ஆகாயமாகவும் மற்ற பஞ்சபூதங் களாகவும் இருக்கக்கூடியவள் (ஆகாயம் முதலான பஞ்சபூதங்கள்) என்று ஆகிறது. இந்த உலகம் எதிலிருந்து தோன்றியது என் றால், பஞ்சபூதங்களிலிருந்து தோன்றியது. ஆகாசத்தில் தொடங்கி, அனைத்துப் பஞ்ச பூதங்களாகவும் அம்பாளே இருக்கிறாள்.

**ஸர்வவியாதிபிரசமனீ-** எல்லாவித மான வியாதிகளையும் சமன்படுத்தக் கூடியவள்; போக்கக்கூடியவள்.

**ஸர்வம்ருத்யுநிவாரிணி-** எல்லாவித மான அழிவுகளிலிருந்தும் காப்பாற்றக்கூடிய வள்.

**அக்ர கண்யா-** முதன்மையாக இருப்ப வள். அக்ர பூஜை என்று சொல்கிறபோதே, முதல் பூஜை என்றுதான் பொருள். அக்ர கண்யா - கணங்களுள் முதன்மையானவள். கணங்கள் என்றால் சிவனை வழிபடக்கூடிய, சிவனைச் சுற்றிலும் இருக்கக்கூடிய அனைத் தும் கணங்கள். அதனால்தான் சிவகணங்கள் என்றே பெயர் ஏற்பட்டது. பசுக்களான ஜீவன்கள் எல்லாமே கணங்கள்தான். அவற் றுள் முதன்மையாக இருக்கக்கூடியவள் அக்ர கண்யா.

**அசிந்த்ய ரூபா-** சிந்தனைக்கு எட்டாத வள் - மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதவள் என்ற பொருள் உடைய ஒரு திருநாமம் ஏற் கெனவே வந்தது. எவ்வளவுதான் யோசித்து யோசித்துப் பார்த்தாலும் சிந்தனைக்கு அப்பாற்பட்டவளாக இருக்கக்கூடியவள் அசிந்த்ய ரூபா.

### கலியுகத்தின் இடர் களைபவள்

**கலிகல்மஷ நாசினி** - நமக்கு ரொம்பப் பொருத்தமான திருநாமம். அம்பாளை வழிபடுவதற்குரிய திருநாமம். கலி காலத்தின் கல்மிஷங்களை எல்லாம் போக்கக்கூடியவள்.

**காத்யாயனி, காலஹந்த்ரி, கமலாக்ஷ நிஷேவிதா**

கமலாக்ஷ நிஷேவிதா என்றால், கமல நயனங்களைக் கொண்ட மஹாவிஷ்ணு வினால் ஆராதிக்கப்படக்கூடியவள். கமலா க்ஷன் என்பது மஹாவிஷ்ணுவுக்கே உரிய பெயர். 'தாமரைக் கண்ணான் உலகு' என்றார் வள்ளுவர். காக்கும் கடவுள் மஹா விஷ்ணு என்பதால் உலகைக் காப்பாற்றும் செயலுக் குரிய கடவுளைத் 'தாமரைக் கண்ணான்' என் றார். மஹாவிஷ்ணுவினால் ஆராதிக்கப்படக் கூடியவள் அம்பிகை.

**காலஹந்த்ரீ-** இந்தத் திருநாமம் கால னையே அழிக்கக்கூடியவள் என்று பொருள் உடையது. ஏற்கெனவே காலைத் தூக்கிக் காலனை அழித்தவர் சிவப் பரம்பொருள். இடதுகாலால் அவர் காலனை உதைத்தார். திருக்கடவூரில் இது நடந்தது. அஷ்ட வீரட் டத்தலங்களுள் ஒன்று இந்தத் திருக்

கடலூர். சிவபெருமான் புரிந்த எட்டு வீரச் செயல்களுள் ஒன்று, காலனைக் காலால் உதைத்தது. மார்க்கண்டேயனுக்காக அவர் செய்த இவ் வீரச் செயலை ஆசார்யர் ஆதிசங்கரர் பாடுகிறபோது, சிவனிடம் ஒரு கேள்வி கேட்கிறார்!

**மார்க்கண்டேயன்**

திருக்கடவூரில் என்ன நடந்தது? ம்ருகண்டு முனிவரின் மகன் மார்க்கண்டேயன். அப்பாவான ம்ருகண்டுதான் வரம் கேட்டார். "நூறு வயது வரை உயிர் வாழக் கூடிய, புத்தியே இல்லாத பிள்ளை வேண்டுமா? அல்லது பதினாறு வருடங்களே வாழக்கூடிய புத்திசாலியான பிள்ளை வேண்டுமா?" என்று அவரிடம் கேட்கப்பட்ட போது, புத்திசாலிப் பிள்ளைதான் வேண்டும் என்று அவருக்குத் தோன்றிப் போய்விட்டது. சிவபெருமானும் அவருக்கு 'அப்படியே ஆகட்டும்' என்று வரம் கொடுத்துவிட்டுப் போய்விட்டார். அந்தக் குழந்தைக்குப் பதினான்கு வயது ஆகிற வரையில் தெரியவில்லை முனிவருக்கு; அவர் கவலைப்படவில்லை! மனித மனம் எத்தகையது என்றால், ஏதாவதொரு துன்பம் வரப்போகிறது என்கிறபோது, அது வரும்போது பார்த்துக் கொள்ளலாம் என்று அமைதியாகிவிடும். அந்தத் துன்பம் நேரப் போகிற நாளுக்கு ஒரு தினம் முன்புதான், 'ஆஹா, நாளைக் கல்லவா?!' என்கிற பயம் பிறக்கும்.

அந்த மாதிரி, ம்ருகண்டு முனிவருக்குத் தமது பிள்ளையை வளர்க்கிறபோது பயம் தெரியவில்லை. மூன்று வயதில் தெரியவில்லை, நான்கு வயதில் தெரியவில்லை, ஐந்து வயதில் தெரியவில்லை, பத்து வயது ஆயிற்று; அப்போதும் தெரியவில்லை. பன்னிரண்டு வயது ஆயிற்று. அப்போதுதான் மார்க்கண்டேயனின் அப்பா அம்மாவுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக பயம் பிடித்துக் கொண்டது! 'அடடா! இந்தப் பிள்ளைக்குப் பதினாறு வயது வரைதானே ஆயுள். என்ன செய்ய? இந்தப் பிள்ளை அதன் பிறகு நம்மோடு இருக்காதே!' என்று பயம் ஆரம்பித்தது.

அப்பாவும், அம்மாவும் ஏதோ கவலையில் இருக்கிறார்கள் என்பது மட்டும் மார்க்கண்டேயனுக்குத் தெரிந்தது. 'என்ன கவலை?' என்று கேட்டவுடன் வேறுவழியின்றி அவர்கள் சொன்னார்கள்.

"இந்த மாதிரி ஒரு வரம் வாங்கி வந்திருக்கிறோம்! நீ பதினாறு வயது வரைதான் வாழ்வாய்" என்றார்கள்.

"அவ்வளவுதானே! கவலைப்படாதீர்கள். சிவபெருமான்தானே வரத்தைக் கொடுத்தார். அவரிடம் கேட்போம்" என்றான் மார்க்கண்டேயன்.

**வரம் ரத்தாகுமா?**

'சிவபெருமானே பதினாறு வயது வரைதான் மார்க்கண்டேயனுக்கு ஆயுள் எனச்

**நம்பிக்கையையெல்லாம் சிவலிங்கத்தின் முன்னால் கொண்டு போட்டு, அதை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டது அந்தப் பிள்ளை!**

சொன்னபிறகு என்ன செய்ய முடியும்?' என்று அவர்கள் நம்பிக்கை இல்லாமலிருந்தனர். சிவபெருமானை பிரத்யக்ஷமாகப் பார்த்த அப்பாவுக்கு நம்பிக்கை இல்லை; ஆனால் சிவபெருமானைப் பார்த்திராத பிள்ளைக்கு நம்பிக்கை இருந்தது!

நம்பிக்கை இருந்தால் எது வேண்டுமானாலும் நடக்கும் அல்லவா! நம்பிக்கையையெல்லாம் சிவலிங்கத்தின் முன்னால் கொண்டு போட்டு, அதை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டது அந்தப் பிள்ளை! யமன் வந்தவுடனே, சிவபெருமான் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு, காலைத் தூக்கி யமனை உதைத்தார் என்பது கதை!




## ஆசார்யரின் கேள்வி

இந்தச் சம்பவத்தைப் பார்த்த ஆசார்யர் சிவபெருமானைப் பார்த்துக் கேட்டார். ஆசார்யர் பார்த்தார் என்று சொன்னால், 'எப்படிப் பார்த்தார்?' என்று நாம் கேட்கக் கூடாது! அவர் ஞானதிருஷ்டியில் எல்லாவற்றையும் பார்த்தவர்! அப்படிப் பார்த்தவர் கேட்டார்:

''என்னப்பா அநியாயம் இது?'' என்று. யாரைப் பார்த்துக் கேட்டார்..? சிவபெருமானையே பார்த்துக் கேட்டார்! அந்த சங்கரனுடைய அவதாரமாக இருக்கக்கூடிய பகவத் பாதர், சங்கரனையே பார்த்துக் கேட்டார்!

'' 'யார் பண்ணிய வீரம் இது?' என்று கேட்டால் சிவன் பண்ணிய வீரம் என்று சொல்கிறோம். அதனால்தான் வீரட்டத் தலம் என்றே கூட பெயர் ஏற்பட்டது. ஆனால், நீங்கள் எந்தக் காலால் யமனை உதைத்தீர்கள் என்று பார்த்தால் இடதுகாலால்தான் உதைத்திருக்கிறீர்கள்!''

**பொ**துவாக, ஒரு விஷயத்தை ரொம்ப சுலபமாக ஒருத்தர் செய்து முடித்தாரானால், இடதுகையால் அல்லது இடதுகாலால் செய்துவிட்டார் என்று சொல்வதுண்டு. இரண்டு கைகளிலும் இரண்டு பொருட்களை நாம் தூக்கிச் செல்லவேண்டுமானால், அதிக பளு உள்ள பொருளை வலதுகரத்தில் தூக்குவோம். ஆனால், அலட்சியமாகத் தூக்கக்கூடியதை இடது கையாலேயே தூக்கி விடுவோம். ஆக, பிரயத்தனம் குறைவாகத் தேவைப்படும் காரியங்களை இடது கை அல்லது காலால் செய்வது வழக்கம். அந்த மாதிரி, 'அட இவ்வளவுதானே' என்று யமனை இடதுகால் கொண்டு உதைத்தாராம் சிவபெருமான்!

இதைப் பார்த்துவிட்டுத்தான் ஆசார்யர் கேட்கிறார்:

''இடதுகாலால்தானே உதைத்தீர்கள்? யாருடைய கால் அது? வாம பாகத்தில் இருக்கிறாளே உமை அம்மை, வாமதேவியாக இருக்கிறாளே, அவளுடைய கால் அல்லவா! அம்மாவுடைய காலால் உதைத்துவிட்டு, பெயரை மட்டும் நீர் வாங்கிக்கொள்கிறீரே! இது நியாயமா! என் தாயினுடைய திருப்பாதங்களைக் கொண்டு உதைத்து விட்டு, நீர் என்னவோ வீரப் பிரதாபம் பண்ணிய மாதிரி பேசுகிறீரே! அந்தப் பிரதாபத்துக்குக் காரணம் அம்பாளுடைய திருவடிகள். ரக்ஷிக்கக்கூடிய திருவடிகள் அவை!'' என்கிறார்.

**சர்வ ம்ருத்யு நிவாரிணி** அல்லவா அம்பிகை! எந்தவிதமான ம்ருத்யுவாக இருந்தாலும் அதற்கு நிவாரணம் தரக்கூடியவள், தன் திருப்பாதத்தைக் கொண்டு கால தேவதையையே உதைத்தாள். ஆகவே, காலனுக்கே அழிவை ஏற்படுத்திய அவள் **காலஹந்த்ரீ.**

**(வளரும்)**

# ஈரப்பணம்

**வெ.தமிழழகன்**



வெள்ள நிவாரணம் வழங்கும் விழா. கூட்டம் அலைமோதியது. கலெக்டரும், எம்.எல்.ஏ.க்களும் கலந்து கொண்டிருந்தனர். சமீபத்திய மழையினால் ஏராளமான மக்கள் வீடு வாசலை இழந்து, பள்ளிக்கூடங்களில் தஞ்சமடைந்திருந்தனர்.

''எம்ப்பா! இங்கே, வீடு வாசல் இல்லாதவங்களுக்கு... பணம் தர்றாங்களாமே?'' விலை உயர்ந்த சேலை அணிந்து, செல்வக் களை சிந்தும் தோற்றத்துடனிருந்த அந்தப் பெண் கேட்க, கூட்டத்தினர் அவளை வெறுப்புடன் பார்த்தனர்.

''ஆமாம். ஏன் உனக்கும் நிவாரணம் வேணுமா?'' என்றாள் ஒரு பெண்.

''இப்ப மட்டுமில்ல, எப்பவுமே... அரசாங்க சலுகைன்னாலே... வசதியானவங்களும், ஆள்பலம் உள்ளவங்களும்தான் பலனடையுறாங்க. சும்மா கிடைக்குதுன்னா... வெட்கம், மானம் எல்லாத்தையும் மறந்துட்டு வந்திருவாங்களே...'' என்றான் இன்னொருவன்.

வந்த பெண்ணுக்கு முகம் மாறிப்போயிற்று. இருப்பினும் தனது மனஉணர்வுகள் எதையும் வெளியே காண்பித்துக் கொள்ளவில்லை.

கூட்ட நெரிசலில் நீந்தி... எம்.எல்.ஏ.வை நெருங்கினாள். அனைவரும் கோபத்தில் அவளைத் திட்டினர். ''கோழி கூப்பிட வந்து நின்னது; பச்சைத் தண்ணி இன்னும் பல்லுல படலை. கவாகவான்னு காத்துக்கிட்டு இருக்கோம். மகராணி மாதிரி... வந்ததும் மேடைகிட்டே போறா பாரு'' என்றாள் மற்றொருத்தி.

இழந்தவர்களுக்கான நிவாரணத்தை இருக்கப்பட்டவர்கள் வாங்குகிறார்களே என்ற ஆதங்கம், அந்த வார்த்தைகளில் தெறித்தது.

''மழை வெள்ளத்துல வீடு வாசல் இழந்தவங்களுக்கு நிவாரணம் தர்றீங்களாமே!?'' என்றாள் அந்தப் பெண்.

எம்.எல்.ஏ. வெறுப்புடன் முறைத்தார்.

''எல்லோருந்தான் அப்படி நிக்கறாங்க! உனக்கென்னம்மா அப்படி அவசரம்? கியூவுல போய் நில்லு'' என்றார்.

''அய்யா... கோபப்படாதீங்க. பத்து நிமிஷத்துல பஸ் வரும். அதை விட்டா... நாளைக்குத்தான் இந்த ஊரைவிட்டுப் போக முடியும்...''

''அதுக்காக?''

''அதுக்காக எனக்குச் சிறப்புச் சலுகை எதுவும் தர வேணாம். இதுல எண்பதாயிரம் ரூபாய் இருக்கு. புள்ளை குட்டி இல்லாதவ நான். முதியோர் இல்லத்துல சேரப் போறேன். இந்தப் பணத்தை வெள்ள நிவாரண நிதியில் சேர்த்துக்கங்க...''

மஞ்சள் நிறப் பையை நீட்ட, எம்.எல்.ஏ. அதிர்ந்தார். அனைவர் கண்களும் ஈரத்தால் பளபளத்தன. ●

# நீங்கள் கேட்டவை

## -தராசு

● மு.பெரியசாமி, விட்டுக்கட்டி

? ''பாகிஸ்தானைப் பழி தீர்க்கும் நேரம் வந்துவிட்டது'' என்று பால்தாக்கரே பேசியிருக்கிறாரே?

! தாக்கரே வார்த்தைகளால் தாக்குவது எளிது. ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் நிஜத் தாக்குதலை நடத்தும் முன்னர் ஆயிரம் தடவை பல் வேறு கோணங்களில் யோசிக்க வேண்டும். பழிக்குப் பழி என்பதைவிட பயங்கரவாதத்தை வெல்ல என்ன வழி என்பதைத் தான் யோசிக்க வேண்டும்.



★ ...குற்றச்சாட்டு!



★ வேறுபடும்...

● பத்மா சுப்பிரமணி, சென்னை - 42

? ரேஷன் அட்டை வைத்திருப்போருக்குப் பொங்கலிடத் தேவையான பொருட்கள் அனைத்தும் இலவசம் என்று தமிழக அரசு அறிவித்துள்ளதே?

! இலவசங்கள் தருவதன் மூலம் ஏழைகளை ஏழைகளாகவே வைத்திருக்க விரும்பும் அரசியல்வாதிகளின் வோட்டு வங்கித் தந்திரம்! இதை அம்மக்கள் உணரத் தொடங்கினால் அவர்கள் வாழ்வில் மட்டுமல்ல, சமூக அமைப்பிலும் மாற்றம் வரும்.

# லஞ்சம், ஊழல் -வேறுபாடு என்ன?

● கே.அகிலாண்டம், காஞ்சிபுரம் ★

? கலாநிதி மாறன் - ரஜினி - ஷங்கர் கூட்டணியால் சாதனை நிகழுமா?

! எந்திரத்தனமான வியாபார சாதனை நிகழ்வது எளிது; சினிமாவின் தரத்திலும் சாதனை நிகழுமேயானால் எந்திரன் மந்திரனாகி, புரட்சி நிகழ்த்துவான்!

● சிவ.இராமலிங்கம், ஆத்தூர் (தூத்துக்குடி)

? காஷ்மீர்?

! உமர் அப்துல்லாவின் ஆடையில் செருகப்பட்டு, அவரது நெஞ்சை அலங்கரிக்கும் ரோஜா. தொடர்ந்து அன்றலர்ந்த ரோஜாவை அணிந்து பெருமையுற, அவர்

ஜம்மு-காஷ்மீர் என்ற மலர்த் தோட்டத்தை, மத ஒற்றுமை உரமிட்டுப் பராமரித்து, முன்னெச்சரிக்கை வேலியிட்டுப் பாதுகாத்து வர வேண்டும்.

● கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை-42

**? இடைத்தேர்தல் முடிவைக் கொண்டு ஆளுங் கட்சியின் செல்வாக்கை எடை போட முடியுமா?**

! செல்வத்தின் வாக்கு அரசியல் செல்வாக்காக மாற முடியுமா என்பதை எடை போடலாம்.

● இரா.சக்கரபாணி, மதுரை

**? பிரதமராக நான் இருந்திருந்தால், மும்பையில் தீவிரவாதிகளின் தாக்குதல் நடந்திருக்காது என்று மார்க்ஸிஸ்ட் கட்சித் தலைவர் சீதாராம் யெச்சூரி கூறியுள்ளாரே?**

! ''நான் மட்டும் அமெரிக்க ஜனாதிபதியா இருந்திருந்தா இரட்டைக் கோபுரம் உடைஞ்சிருக்காது'' என்று அங்கே யாரும் உளறவில்லை!

● பா.அசோக், விருதுநகர்

**? லஞ்சம் - ஊழல் இரண்டுக்கும் என்ன வேறுபாடு?**

! லஞ்சம்: திருமங்கலம் - ஸ்டாலின் மீது குற்றச்சாட்டு. ஊழல்: ஸ்பெக்ட்ரம் - ராஜா மீது குற்றச்சாட்டு.

● பி.என்.ஜெய்குமார், திருவாரூர்

**? ''நீதிக்கும் அநீதிக்கும் இடையே நடக்கும் தேர்தல்'' என திருமங்கலத்தில் வைகோ ஆவேசப்பட்டுள்ளாரே?**

! திருத்தம்: அநீதிக்கும் அதைவிட அநீதிக்கும் இடையே நடக்கும் போட்டி!

● நா.கோவிந்தம்மாள், திருவில்லிபுத்தூர் ❒

**? ஆளுங்கட்சி மக்களுக்குப் பல இலவசங்களை அளித்தாலும் இடைத் தேர்தலில் மக்களின் வாக்குகளை 'இலவச'மாகப் பெற முடியாமல் 'விலை' கொடுக்கும் சூழ்நிலை ஏற்பட என்ன காரணம்?**

! இலவசங்களை அள்ளித் தந்தும் தோத்துட்டாங்க என்ற அவப்பெயர் குறித்த அச்சம்தான்!

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**? தமிழீழ ஆதரவு மாநாட்டில் திருமாவளவன், விடுதலைப் புலிகள் பற்றியோ பிரபாகரன் பற்றியோ ஒரு வார்த்தை பேசவில்லை; கவனித்தீர்களா?**

! புலிகள் ஆதரவுப் பேச்சுக்கு எதிராக முதல்வர் எச்சரிக்கை விடுத்ததும், புலிகள் ஆதரவை தமிழீழ ஆதரவாக உருமாற்றி நாடகமாடுகிறார்கள். இது பசுத் தோல் போர்த்திய புலி என்று உணர்ந்திருந்தும் முதல்வர் கண்டுகொள்ளாமல் இருப்பது, அவரது



✱ மந்திரப்...





❒ ரூ.100/- பரிசு பெறுபவர் :

நா.கோவிந்தம்மாள், திருவில்லிபுத்தூர்

✱ ரூ.50/- பரிசு பெறுபவர் :

கே.அகிலாண்டம், காஞ்சிபுரம்



தாக்குதல் வார்த்தைகள்!



* தொகையும் தொகுதியும்!



* நெஞ்சில் ரோஜா!

அனுதாபம் எங்கே என்பதை அம்பலப் படுத்துகிறது.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? வங்க தேசத்தில் கலீதா ஜியாவைத் தோற்கடித்து, ஷேக் ஹசீனா வெற்றி பெற்றுள்ளது பற்றி..?**

! சர்வாதிகாரப் போக்குக்கு எதிராகப் பெற்ற வெற்றி. சாமானிய வெற்றி அல்ல; வரலாறு காணாத வெற்றி! அந்த அளவுக் குப் பொறுப்பின் சுமையும் கூடுகிறது.

● ரா.பிரசன்னா, மதுரை

**? 'தேசிய அளவில் கடல்சார் பாது காப்பு அமைப்பு விரைவில் அமைக்கப் படும். நாடு முழுவதும் அனைத்து மீனவர்களுக்கும் அடையாள அட்டை கட்டாயமாக்கப்படும்' என மத்திய கப்பல் போக்குவரத்துத்துறை அமைச்சர் டி.ஆர். பாலு கூறுகிறாரே?**

! கடல் கொள்ளை, பயங்கரவாதி களுக்கு ஆயுதக் கடத்தல், போதைப் பொருள் கடத்தல் என்றெல்லாம் அக்கிர மங்கள் நடப்பதால் அடையாள அட்டை அவசியம் என்று மத்திய அரசு கருதுகிறது போலும். ஆனால், போலி விசா, போலி பாஸ்போர்ட் தயாரிக்கும் பயங்கரவாதி களுக்கு, போலி அடையாள அட்டை ஜுஜுபி! கடல்சார் பாதுகாப்பு அமைப்புக் குப் பெரிய சவால்!

● சி.மகேஷ், திருச்சி-17

**? ''எந்தத் தடையையும் மீறி ஒகேனக் கல் குடிநீர்த் திட்டம் நிறைவேற்றப்படும்'' என்கிறாரே கலைஞர்?**

! தடையை மீறி நிறைவேற்றுவதைவிட, ஒத்துழைப்பைப் பெற்றுச் சாதிப்பதே முன்னுதாரணமாகத் திகழ்ந்து, நாட்டுக்கும் நலன் பயக்கும்.

● டி.ராமகிருஷ்ணன், குளித்தலை

**? காசாவில் பாலஸ்தீனர்கள் இஸ்ரே லைப் போய் வம்பு செய்து, தானாகச் சீண்டுவதும், ஆனால், இஸ்ரேலை மட்டும் ஜெ.கண்டிப்பதும் நியாயமா?**

! ஜெயலலிதாவுக்கு எதைப் பற்றியும் யாரைப் பற்றியும் ஒரு ஆணித்தரமான கருத்து தெரிவித்தாக வேண்டும். இதில் அவருடைய துணிவு உள்ள அளவுக்கு விவேகம் இருப்பதாக எண்ண முடியாது. இப்போதைய இஸ்ரேல்-பாலஸ்தீனச் சண்டை பற்றி இதுவரை வெளிவந்துள்ள அறிக்கைகளில், போப்பாண்டவரின் வேண்டுகோள் ஒன்றுதான் அர்த்தமுள்ள தாக இருக்கிறது.

● எஸ்.ராமசாமி, வடக்கு தயிர்பாளையம்

**? தம் சொந்தச் செலவில் தொகுதி களின் தேவைகளை நிறைவேற்றுவேன் என விஜயகாந்த் கூறியுள்ளாரே? செய் வாரா? சாத்தியம்தானா?**

! உஷ்... இன்கம்டாக்ஸ்காரங்க காதுல விழுந்துடப் போகுது!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

**? சாகித்ய அகாடமி விருது பெற்றுள்ள பொன்னுசாமிக்கு, 'மேலாண்மை' என்ற பெயர் எப்படி வந்தது?**

! அது அவரது சொந்த ஊரான மேலாண் மறை நாடு என்கிற சிற்றூரின் குட்டிப் பெயர்.

●



# ஏழுமலையான் புண்ணியம்!

**கி**ண்டி இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டில் ஒரு எக்ஸிகியூடிவ் இன்ஜினீயர் அலுவலகத்தில் வேலை பார்ப்பவன் ஏ. ஏழுமலை. ஏகாம்பரம் அவன் அப்பா பெயராக இருந்தாலும்... அலுவலகத்திலும் சரி, மற்றவர்களுக்கும் சரி... அவன் ஏமாந்த ஏழுமலை.

'மாங்கு மாங்கு' என்று எவ்வளவு வேலை வேண்டுமானாலும் செய்வான். அடுத்தவர்கள் அவன் தலையில் கட்டும் வேலையையும் ஏழுமலையானுக்குச் செய்யும் தொண்டாகவே நினைத்துக் கொள்வான். அந்த நம்பிக்கை அவனுக்குள் ஊறிப் போயுள்ளது.

ஏழுமலையிடம் சப்ளையர்கள் தட்சிணை செல்லுபடியாகாது. 'வேண்டாங்க... அந்த ஏழுமலையான் படியளப்பதே எனக்குப் போதும். அதற்கு மேல் கெடைச்சா என் உடம்புக்குத் தாங்காது. அல்லல்படவும் செய்யணும். எனக்கு இருப்பதே போதும்' என்று நிறுத்திவிடுவான்.

அவனைப் பற்றி அலுவலகத்தில் கவலைப்படுபவர்கள் உண்டு.

'என்னடா, ஏமானியா இருக்கானே... நாம சட்டைப் பையில் கனத்துடன் வீட்டுக்குப் போறோம். இவனை யும் நம்ம கூட்டில் சேர்த்து விட்டால் சௌகரியமாகப் போய்விடும். இல்லாவிட்டால் வெள்ளாட்டு மந்தையில் அவன் ஒரு கறுப்பு ஆடாக மாறினாலும் மாறிவிடுவான்' என்று சந்தேகம் கொள்வார்கள்.

ஆனால், நாளாக ஆக அந்தக் கலக்கமெல்லாம் மறைந்துவிட்டது. ஏ.ஏழுமலை உண்மையாலும் ஏமாந்த ஏழுமலை என்று விளங்க ஆரம்பித்ததும், அவனைப் பற்றிய சந்தேகம் விலகி விட்டது. இருந்தாலும் அவன் பங்கைக் காணிக்கையாக்குவது மாதிரி, அலுவலகத்தில் ஏழுமலையான் படத்துக்கு முன்னால் ஒரு உண்டியல் பெட்டிக்கு ஏற்பாடு செய்தான் பரமசிவம்.

எப்பவாவது அவர்கள் கூட்டாக டாக்ஸி பிடித்து ஏழுமலையானைத் தரிசித்து வருவார்கள். அப்போது அந்த உண்டியலைத் திறந்து ஏழுமலையானின் உண்டியலில் பத்திரமாகச் சேர்த்து விடுவார்கள். ஏனோ அந்தச் சமயங்களில்கூட அவர்களுடன் கூட்டுச் சேரமாட்டான்.

**வ**ழக்கம் போல ஒரு நாள் மாலையில் கம்ப்யூட்டர் முன் உட்கார்ந்து அல்லாடிக் கொண்டிருந்த ஏழுமலை. நேரம் போவது தெரியாமல் வேலையில் மூழ்கி விட்டான்.

'மணி ஏழரை ஆச்சே...'

'அலுவலகத்தில் ஒருத்தரும் இல்லை...'

'நாமும் நடையைக் கட்டி விட வேண்டியதுதான்...'

அதற்குள் இந்த வயித்துப் போக்கைக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்று 'டாய்லெட்' பக்கம் சென்றான்.

வயிறு நிம்மதி கொண்டது.

வெளியே வந்தபோது, வாயிற் கதவு பூட்டப்பட்டிருந்தது.

'என்னடாது...?'

கதவைத் தள்ளிப் பார்த்தான்...

தட்டிப் பார்த்தான்...

ஊஹூம்...

'போச்சுடா... தனியா மாட்டிக் கிட்டோம்...' என்று உறைத்தது.

இலேசாகத் திகில் கொள்ள ஆரம்பித்தது, ஏழுமலைக்கு.

அவனிடம் செல்ஃபோன் கிடையாது. மற்றவர்களின் தொலைபேசி எண்களை நினைவில் வைத்துக்கொள்வதும் கிடையாது. கேட்டில் உள்ள செக்யூரிட்டியின் எண் கூடத் தெரியாது. அதிகாரிகளின் அறைகள் பூட்டியிருந்தன. ஹாலில் அலுவலகத்

## இடைப்பாடி அமுதன்

துக்கான தொலைபேசி மட்டும் நம்பிக்கை நட்சத்திரமாய்த் தெரிந்தது.

'மாலதி சாமர்த்தியக்காரி... ஏதாவது செய்வாள். நண்பர்கள் யாருக்காவது ஃபோன் போட்டு வரச்சொல்லி விடுவாள். இல்லாவிட்டால் தானே வந்தாலும் வந்து விடுவாள்...'



வீட்டுக்கு ஃபோன் பண்ணினான். எண்களைத் தட்டிவிடும் போதே, மாலதியை நினைத்துப் பயமும் கொண்டான்.

'நீங்க ஏமாளிங்கறது இப்பவாவது புரியுதான்னு குத்திக் காட்டுவாள்... என்ன செய்வது? மாட்டிக் கொண்டோம். இங்கிருந்து கிளம்பணுமே.. இல்லாட்டி சோறு தண்ணி இல்லாம ராப்பொழுதை இந்தக் கொகக்கடியில் கழிக்க வேண்டியதுதான்..'

''ஹலோ, மாலு... நான் ஆஃபீஸ்ல ஒரு சிக்கல்ல மாட்டிக் கிட்டேன்...'' என்று நாத்தழுதழுக் கப் பேசினான்.

''என்னங்க ஆச்சு...?'' கலங்க ஆரம்பித்தாள், மாலதி.

''ஒண்ணுமில்ல... ரொம்ப நேரமா ஆஃபீஸ் வேலையில மூழ்கிட்டேனா... நான் இருப்பது தெரியாம வாட்ச்மேன் கதவைச் சாத்திட்டுப் போயிட்டான். இப்ப அவனைக் கூப்பிடவும் முடியலை. நாலாவது மாடியிலிருந்து எட்டிப் பார்த்தாக்கூட அவன் உருவம் தெரியாது'' அழாத குறையாகச் சொன்னான்.

'அப்பாடா...' கொஞ்சம் நிம்மதி ஆச்சு மாலதிக்கு.

''இதுக்குத்தான் நான் சொல்றது... நேரத்தோட கௌம்பி வீட்டுக்கு வாங்கன்னு...'' அவள் குத்திக் காட்டினாள்.

''உன் கடுப்பை எல்லாம் அப்புறம் வெச்சுக்க மாலு... என் ஃப்ரெண்ட் முரளிக்கு ஃபோன் போட்டு விஷயத்தைச் சொல்லு.''

சிடுசிடுப்பு வந்தது மாலதிக்கு. டைரியில் முரளி எண்களைத் தேடித் தட்டினாள்.

''இப்பத்தான் வந்தாரு... பக்கத்தில கடை வரைக்கும் போயிருக்காரு. திரும்பி வர நேரமாகும்...'' என்று சொல்லிவிட்டாள் அவன் மனைவி.

திரும்ப ஃபோன் பண்ணிச் சொல்லி விட்டாள் மாலதி. அவளுக்கே சலிப்பு வந்தது.

''மாலு, நீயாவது எங்க ஆஃபீஸ் வரை கொஞ்சம் வந்துட்டுப் போயேன்... ஆட்டோ பிடிச்சு பீச் ஸ்டேஷன் வந்தேன்னா ஒரு மணி நேரத்துல திரும்பிப் போயிடலாம்...'' கெஞ்சினான்.

''என்ன வெளையாடறீங்களா? பையனும் பொண்ணும் வீட்ல தனியா இருக்காங்க... படிச்சிக்கிட்டிருக்காங்க... ஒரு மணின்னு சுலபமா சொல்லிட்டீங்க. இங்கிருந்து நேரா ஆட்டோ பிடிச்சு வந்தாக்கூட ஒண்ணரை மணி நேரத்துக்கு மேல ஆயிடும். காலைல ஆறு மணிக்குக் கிளம்பி வர்றேன்...'' என்று ஃபோனை

## காதல் பூச்சாண்டி

**''பூ**ச்சாண்டி பூச்சாண்டி/காதல் பூச்சாண்டி/ வருவாண்டி வருவாண்டி/ எவருக்குள்ளும் வருவாண்டி/இது பருவ தந்திரம்/மனசு பத்திரம்/

- எழுதி வெச்சுக்குங்க. 'இமான்' இசையில் சினேகன் எழுதியிருக்கிற இந்தப் பாடல்தான் '2009'-ன் சூப்பர் டூப்பர் ஹிட். அந்த அளவுக்கு இன்றைய இளைஞர்களின் வாழ்வில் காதல் படுத்தும் பாட்டை எழுத்தில் வடித்திருக்கிறார் சினேகன்'' என்கிறார் 'ஓடிப் போலாமா' படத்தின் இயக்குநர் கண்மணி.

''ஒரு டீன்-ஏஜ் பையனுக்கும், மனத்தளவில் மெச்சூர்டு ஆன டீன் ஏஜ் பெண்ணுக்குமிடையே முகிழ்க்கும் காதல்தான் கதை. ஹீரோவாக புதுமுகம் பரிமள் அறிமுகமாகிறார். ஹீரோயின் சந்தியா. பரிமள் ரொம்ப நல்லா நடிச்சிருக்கார். ஆரம்பத்துல புதுமுகம்ங்கற தடுமாற்றம் கொஞ்சம் இருந்தாலும் போகப்போக கற்பூரம் மாதிரி கப்புன்னு பத்திக்கிட்டார். சந்தியாவைப் பற்றிச் சொல்ல

வேண்டியதில்லை. அசந்தா தன் நடிப்பால் கூட நடிக்கறவங்களையே, காலி பண்ணிடுவாங்க. தான் ஒரு புதுமுகத்தோட சேர்ந்து நடிக்கறோமேன்னு எந்த ஒரு ஈகோவையும் அவர்கிட்ட நான் பார்த்ததில்லை'' என்கிறார் கண்மணி.

மேலே உள்ள பாடலைப் பாடியவர் ஆர்த்தி கண்டிலிகர். நம்ம ஊர் சௌம்யா போல பிரபலமான ராஜஸ்தானி பாடகியாம். ஐந்தாம்படை படத்துக் கான சவுண்ட் மிக்ஸிங்க்கு மும்பை போனபோது தான் மியூஸிக் டைரக்டர் 'இமான்' கண்டிலிகரைத் தமிழுக்குக் கவ்வி வந்திருக்கிறார்.

**- கலில்**


❋ 'ஓடிப் போலாமா' படத்தில்...

வைத்துவிட்டாள். பரமசிவம் உட்காரும் மேசை நினைவுக்கு வந்தது. கண்டிப்பாக அதில் பிஸ்கட் பாக்கெட் இருக்கும். திறந்துதான் வெச்சிருப்பான்.

எதிர்பார்த்தபடி உடைக்கப்படாத பிஸ்கட் பாக்கெட் ஒன்று தென்பட்டது. கையில் எடுத்தான். அதை எடுத்ததும்... கண்ணில் தென்பட்டதைக் கண்டு திடுக் கிட்டான்.

கரன்ஸி நோட்டுகள்...

'பக்'கென்று இருந்தது. ஐம்பது, நூறு, ஐநூறு என்று நோட்டுகள்.

'இவ்வளவு பணமா...! கேட்பாரற்றுக் கெடக்குதே...'

பரமசிவத்தின் மேசைக்குப் பின்னால் ஏழுமலையான் பட்டை நாமத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

'எனக்காகத்தாம்ப்பா இந்தப் பணம்...' என்று அவர் சொல்வது போல் பட்டது.

'இப்படியெல்லாம் சேர்த்து வைக்கிற பணம்லாம் உனக்கு வேணுமா..?' என்று கேட்கிற மாதிரி யோசித்தவன், ஏழுமலை யானின் கால்களைத் தொட்டு வணங்கினான்.

'இதை ஏழுமலையானுக்கு சமர்ப்பணம் பண்ண இவங் களுக்கு எப்படி மனசு வரு துன்னே தெரியலை.'

துடைத்த கண்களை டெலி ஃபோன் மேல் செலுத்தினான்.

அதை உற்றுநோக்கினான்.

அவனுக்கு ஒரு தொலைபேசி எண் நினைவுக்கு வந்தது.

எளிதாக நினைவில் வைத்துக் கொள்ள வைக்கும் எண்கள். ரிசீவரை எடுத்து எண்களைத் தட்டினான்.

'100'

''போலீஸ் கன்ட்ரோல் அறை...''

உள்ளதைச் சொல்லி முடித்தான் ஏழு மலை. அலுவலகத்தைக் கழுவி சுத்தப் படுத்தியது போன்று நிம்மதியாயிருந்தது. ஏமாந்த ஏழுமலை எல்லாம் தெரிந்த ஏழு மலையாய், அணைந்த எரிமலை மாதிரி குளிர்ந்தான்.

'நம்மால் முடிந்த கைங்கர்யம்...'

'எல்லாவற்றையும் அந்த ஏழுமலை யான் பார்த்துக் கொள்வான்...'

நிம்மதியான எதிர்பார்ப்புடன் போலீஸ்காரர்கள் வருகையை எதிர் பார்த்து நின்றான் ஏழுமலை. ●

**ரா**கம் - தானம் - பல்லவி பாடுவது கச்சேரி மரபு. இந்த சீசனில் அதை மீறிக் காட்டினார் இளம் பாடகர் டி.எம். கிருஷ்ணா. ராகம்-தானம் பாடி விட்டு, விரிபோணி வர்ணத்தை அவர் பாடியது சங்கீத மெக்கா வாகக் கருதப்படும் மியூசிக் அகாடமியில்.

பத்திருபது ஆண்டுகளுக்கு முன்பு, கிருஷ்ணா வயது வித்வான் எவரும் இப்படி அப்பட்டமாக, காரணமின்றி மரபு மீறத் துணிந்திருக்க மாட்டார்.

ஏற்கெனவே அங்கொன்றும் இங் கொன்றுமாகக் கசிந்து கொண்டிருக்கும் மரபு மீறல்களுக்கு, கிருஷ்ணாவின் ராகம்-தானம்-வர்ணம் ராஜபாட்டை போட்டுத் தந்து விடும் அபாயம் இருக்கிறது. வெற்றி பெறப் போராடிக் கொண்டிருக்கும் ஒரு கலைஞர், கவனத்தை ஈர்ப்பதற்காக ஏதே னும் புதுமை செய்ய முயன்றால், அதை ஓரளவு புரிந்துகொண்டு அனுதாபப்படலாம். ஆனால், வெற்றியின் உச்சத்தில், ரசிகர்களின் கண்மணியாக, சம்பிரதாய சங்கீதத்தில் வளையவருபவர்கள், இவ்வாறு வித்தை காட்ட முற்படுகிறபோது அலுப்புதான் ஏற் படுகிறது. இது பிற இளம் கலைஞர்களால் தவறான முன்னுதாரணமாகக் கொள்ளப் படுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது.

**ம**ரபுகளை ஏன் மீறக்கூடாது? என்று வீம்பாகக் கேட்பவர்களுக்கு தொன்மக் கலை உலகில் இடம் இல்லை! நல்மரபுகள் வாழ் வின் ஆதாரம். அவற்றை மீறக்கூடாது என்று யாரும் சட்டம் போட முடியாது; ஆனால் மீறாமல் தொடர்வதனால்தான் மனிதகுலம் தழைக்கிறது. மீறுகிற இடங்களில் நசிவும் நலிவும் காண்கிறோம். இதே காரணத்துக் காகத்தான் கச்சேரி மேடைகளிலும் நல்மரபு கள் காக்கப்பட வேண்டியது அவசியமாகி றது. அவை காலத்தால் புடம்போடப்பட்டு கனன்று நிற்கும் தொன்மங்கள் அல்லவா!

ஆனால், பொதுவாகவே இன்று கர்நாடக சங்கீதக் கலைஞர்களின் கவனம், மரபு களைப் பேணுவதைக் காட்டிலும், தங்களை எவ்வகைகளிலெல்லாம் வெளிப்படுத்திக் கொள்ளலாம் என்பது நோக்கிச் செல்வ தாகவே தோன்றுகிறது. மாடலிங், சினிமா, சக கலைஞருடன் இணைந்து புனையும் புதுமை, ஒலிப்பதிவு முயற்சிகள், நிறுவனம் தொடங்குவது, ஃபெஸ்டிவல் நடத்து வது என்று, பேசப்படுகிற வகையில் இயங்கிக் கொண்டே இருப்பது முக்கியமாகிவிட்டிருக் கிறது. இவையெல்லாமே மேடையில் அரங் கேறும் இசைக்கு வளமும் அழகும் ஆழமும் சேர்த் தால் மகிழ்ச்சியோடு ஏற்கலாம், வரவேற்க லாம்.

ஆனால் அவ் வாறு நிகழ்வது அ ரி து .




ஏனென்றால், கர் நாடக சங்கீதம் என்பது கைராட்டையில் நூல் நூற்பது போன்ற மிக நுட்பமான யோகம். கையும் கண்ணும் மட்டும் சேர்ந்து நூல் நூற்றுவிட முடியாது. அதற்கொரு மனோலயம் வேண்டும். அந்த மனோ லயம் பிசகினால் நூல் அறுந்துவிடும்!

- பட்டுப் புடைவை விளம்பரங்களிலும் பத்து விரல் மோதிரத்திலும் பெருமை கொள் வது
- பேப்பரைப் பார்த்துப் பாடுவதை நியாயப்படுத்துவது (தெருக்கூத்துக் கலைஞர்






பேப்பர் வைத்துக்கொண்டு பாடுவதைப் பார்க்க முடியுமா?)

- ரசிகர்கள் மகிழ்கிறார்கள் என்பதற்காக நர்சரி ரைம்களைக்கூட கச்சேரி மேடைகளில் பாட முற்படுவது
- வற்றிப்போன மனோதர்மம்; வாடி வதங்கிப்போன உணர்ச்சி பாவம்
- ஒத்துழையாமை இயக்கம் நிகழ்த்தும் குரல்வளம்
- சுருதி சேராவிட்டால் என்ன? கற்பனை வளம் பொழிகிறதே என்கிற சவடால் சமாதானம்.
- ''பொருளுணர்ந்து பாடாவிட்டால் என்ன? சாஹித்ய பாவமில்லாவிட்டாலும் சங்கீத பர்வம் இருக்கிறதே'' என்கிற விதண்டாவாதம் (அப்படியானால் சாஹித்யங்களை ஏன் பாட வேண்டும்? பேசாமல் ராகம் மட்டும் பாடலாமே!)

# கைராட்டையும்... கர்நாடக சங்கீதமும்..!

- இவை எல்லாமே மனோலயம் பிசகியதன் அறிகுறிகள். இவை எல்லாம் இந்த சீஸனில் நல்ல சங்கீதத்துடன் போட்டி போட்டுக்கொண்டு மேடையை ஆக்கிரமித்தன.

**உ**ள்நோக்கித் திரும்பும் தேடலே க்ளாஸிகல் கலைகளின் ஜீவநாடி. சீரான மனோலயம் இருந்தால் மட்டுமே அது சாத்தியமாகும்.

திறமைகளின் அரங்கேற்றம் என்பது க்ளாஸிகல் ஆர்ட் ஆகிவிடாது. அது தற்காலிக மகிழ்ச்சியைத் தரும் வித்தை வெளிப்பாடு. இது உலகம் ஏற்கிற உண்மை.

வீம்புக்காக நிகழ்த்தப்படும் மரபு மீறல்கள் புதுமையாகிவிட மாட்டா. கலையில் ஆழ்ந்து அதன் உயர்வை உணர்ந்து, அதனிடத்தில் கலைஞன் பணியும்போது புதுமைகள் தாமாக மலரும். அவற்றில் தெய்வீக அழகு பிரகாசிக்கும்.

அப்படிப்பட்ட தேடல் நோக்கித் திரும்பியிருக்கும் ஓரிரண்டு தேர்ந்த கலைஞர்களையும் நிரும்பக்கூடிய பல அறிமுகக் கலைஞர்களையும் இந்த சீஸனில் கேட்டனுபவிக்க முடிந்தது என்பது பெரிய ஆறுதல்.

அதே சமயம், தாங்கள் ஒரு பொற் காலத்தின் மையத்தில் இருப்பதை இன்றைய கலைஞர்கள் உணர்ந்து சுதாரித்துக் கொள்ள வேண்டுமே என்கிற கவலையும் எழுகிறது. முன்னெப்போதைக் காட்டிலும் அதிக எண்ணிக்கையில் கலைஞர்கள், வாய்ப்புகள்; மிக அதிக அளவில் திறமை, வருமானம் எல்லாம் இன்று காணக்கிடைக்கிறபோது, இது கலைஞர்களுக்குப் பொற்காலம்தானே? ஆனால் நாற்பத்தைந்து வயதைக் கூடத் தொடாத அரை டஜன் கலைஞர்கள் இன்று நிரந்தரக் குரல் பிரச்னையோடு போராடிக் கொண்டிருக்கிறார்கள். உடல்நலக் குறைவினால் மிக அதிக அளவில் கச்சேரிகள் ரத்தாகியிருக்கின்றன.

தங்கள் திறமைகளை வளர்த்துக் கொள்ளும்போதே உடல்-மன ஒருங்கிணைப்பையும் ஆரோக்கியத்தையும் கலைஞர்கள் பேணாவிடில், இசையுலகின் பொற்காலம் சட்டென்று இருண்டு போய்விடும். அதற்கிடமளிக்காமல் அவர்கள் சுதாரித்துக் கொள்ளவேண்டிய தருணம் இது.

**தும்புரு**






# கதைத் திருவிழா

''ஒரு குருவுக்கு பத்து சீடர்கள் இருந்தாங்க. அந்தப் பத்து பேரும் எங்க போனாலும் ஒரு படகைத் தூக்கிட்டே போனாங்க. அது குளிக்கப் போனாலும் சரி; சாப்பிடப்போனாலும் சரி; படகைத் தூக்கிட்டே திரிஞ்சாங்க. 'ஏன்டா இப்படி படகைச் சுமந்துக்கிட்டு அலையரீங்க?'ன்னு ஒருத்தர் கேட்டாரு. அதுக்கு, 'இந்தப் படகுதான் நாங்க நதியைக் கடந்து வரதுக்கு உதவி செஞ்சது. எங்களுக்கு உதவின படகுக்கு நாங்க நன்றி மறக்கலாமா? அதான் தூக்கிட்டே இருக்கோம்'னாங்க.

படகு, தானே நதியைக் கடந்திருக்குமா? ஒரு படகோட்டி இருந்திருப்பான். தள்ளறதுக்கு இரண்டு துடுப்பு இருந்திருக்கும். பட கோட்டியும், துடுப்பும் இல்லாம, படகு நதியைக் கடக்க உதவியிருக்காது இல்லியா?

அந்த நதிதான் 'சினிமா' என்கிற என்டர்டெய்ன்மென்ட். படகுதான் நடிகர்; படகோட்டிதான் டைரக்டர். துடுப்புகள்தான் கதையும், இசையும். இனிமே சினிமாவுக்குப் போனா என்ன செய்யணும்?''


✱ எரிக்மில்லர்

பேசிக்கொண்டே வந்த எழுத்தாளர் நடராஜன் டக்கென்று கேள்வி எழுப்பினார்.

''படகை தியேட்டரிலேயே விட்டுட்டு வந்துருவோம்'' என்று பளிரென்று பதில் சொன்னார்கள் சிறுவர்கள். கூட்டம் படபடவென்று கைதட்டியது.

இந்திய வளர்ச்சி இயக்கம் நடத்திய 'இளங்கதை சொல்லி 2008'க்கான விருது வழங்கும் நிகழ்ச்சியில் நடந்த சுவையான சம்பவம் இது.

நான்காம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரையில் பயிலும் பள்ளிச் சிறுவர் சிறுமியர், இந்த நிகழ்ச்சியில் பங்கேற்று கதை சொன்னார்கள். போதிசத்துவர் கதை, தெனாலிராமன் கதை... என்று நாம் அறிந்த, அறியாத கதைகள் எல்லாம் குழந்தைகள் மூலம் வெளிப்பட்டன. சுமார் 1700 கிராமங்களில் இருந்த கலந்து கொண்ட 9000 பேரில், பதினைந்து பேர் இறுதிப் போட்டிக்குத் தேர்வு பெற்றனர்.




# "கண்ணைப் பார்த்துப் பேசு!"

அந்த இறுதிப் போட்டிக்கு எழுத்தாளர் இரா.நடராஜன், விஷ்ணுப்ரியா, ரங்கஸ்ரீ, கவிஞர் மு.முருகேஷ் ஆகியோர் நடுவர்களாக இருந்து விருதுக்கு உரியவர்களைத் தேர்ந்தெடுத்தனர்.

கிருஷ்ணகிரி மணிமேகலை, சென்னை ஷைலா, கோவை வாசுகி, சிவகங்கை அலெக்ஸ், திருச்சி எஸ்.கார்த்திக், திருவள்ளூர் ஜபசிங் என்று ஆறு பேர் தேர்வாயினர். விருதளித்துப் பேசிய இந்திய வளர்ச்சி இயக்கத் தலைவரும், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தருமான முனைவர் வசந்திதேவி, 'பாடங்களில் பெறும் தேர்ச்சியை மட்டும் கருத்தில் கொள்ளக்கூடாது. இங்கே குழந்தைகள் கதை சொன்ன விதம், அப்போது வெளிப்படுத்திய நடிப்பு, குரலின் ஏற்ற இறக்கங்கள் எல்லாம் கூட, திறமைதான். இவையும் கவனித்து ஊக்குவிக்கப்படுவது அவசியம்'' என்று குறிப்பிட்டார்.

'பூ' திரைப்படத்தின் இசையமைப்பாளர் எஸ்.எஸ்.குமரன், எழுத்தாளர் கீரனூர் ஜாகிர் ராஜா, முனைவர் பாலாஜி சம்பத், சீனிவாசன் உள்ளிட்ட பலரும் கலந்துகொண்ட விழாவில் 'World Story Telling Institution' அமைப்பின் இயக்குநர் எரிக் மில்லர் கதை சொல்லும் முறை பற்றிச் சொன்ன கைடு லைன்:

''கதை சொல்லும்போது மொத்தமாகக் கூட்டத்தைப் பார்த்து கதை சொல்லக் கூடாது. குறிப்பாக யாராவது ஒருவரின் கண்ணைப் பார்த்துப் பேசுங்கள். அதனால், அவர்களும் கதையில் ஒன்றுவார்கள்.''

கதை சொல்ல மட்டுமல்ல; அனைவரிடமும் இப்படிப் பேசுவதுதான் உறவுகளை மேம்படுத்தும் என்பது முத்தாய்ப்பான விஷயம்!

– ராகவன்

படங்கள் : ஸ்ரீஹரி

# சோதனை மேல்

**கேள்விகள் எழுப்பினால்தான் விவரங்கள் புரியும்; நியாயம் கிடைக்கும் என்பார்கள். இதோ சில கேள்விகள்.**

- முதல் முறை ஓர் இளைஞன் தனக்குச் சர்க்கரை நோய் உள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ள, ரத்தப் பரிசோதனையும் சிறுநீர்ப் பரிசோதனையும் செய்துகொள்ளச் சொல்வது நியாயம். ஜி.டி.டி. சோதனை, கண் பரிசோதனை போன்ற அடுத்த நிலை பரிசோதனைகள் தேவையா?
- இதயநோய் தொடர்பான எந்த அறிகுறியையும் கூறாதபோதே ஈ.சி.ஜி.யோடு ட்ரெட்மில் சோதனை எதற்காக?
- மருத்துவர்கள் விளம்பரம் செய்துகொள்வதை மருத்துவக் குழு தடைசெய்திருக்க, விளம்பரங்கள் எப்படி ஊடகங்களில் வெளியாகின்றன?

ஒரு பிரபல மருத்துவமனையில் மாலையானால் அங்குள்ள டாக்டர்களுக்கு டிஃபன் பாக்ஸ்கள் அனுப்பப்படுமாம். அவற்றில் இருப்பவை உணவுப் பொருட்கள் அல்ல, கரன்ஸி நோட்டுகள்! யார் யார் எந்த அளவுக்கு (மருத்துவமனையிலுள்ள சோதனைக் கருவிகளுக்கு மருத்துவப் பரிசோதனை களை)ப் பரிந்துரைத்தார்களோ அதற்குத் தகுந்த மாதிரி கமிஷன் தொகை.

இதைக் குறிப்பிட்ட ஒரு டாக்டர் வேறொன்றையும் சொன்னார்: ''சில அடிப்படையான சோதனைகளை யாருமே




## ஹாஸ்பிடல் எத்திக்ஸ்

**ஜி.எஸ்.எஸ்.**

# சோதனை!



செய்துகொள்வது அவசியம்தான். அதாவது ரத்த அழுத்தம், ரத்த சர்க்கரை, பெண்களாக இருந்தால் மம்மோகிராம், பாப்ஸ்மியர் போன்றவை. ஐம்பது வயதானதும் கண் பரிசோதனை செய்து கொள்ளலாம். அறுபது வயதான ஆண்கள் சிறுநீர் மற்றும் ப்ராஸ்டேட் சோதனை செய்து கொள்ளலாம். மற்றபடி உடலில் எந்தத் தொல்லையும் இல்லையென்றால் ஈ.சி.ஜி.கூட அவசியமில்லை. தேவையில்லாத பரிசோதனைகளால் மன உளைச்சல்தான் வரும்.''

நியாயம்தான். ஆனால் மாஸ்டர் செக் - அப் செய்துகொள்ள அரசு மருத்துவமனைகளைப் பெரும்பாலானோர் தவிர்ப்பது ஏன்? இத்தனைக்கும் வெறும் 250 ரூபாயில் ஈ.சி.ஜி., எக்ஸ்ரே, அல்ட்ரா சோனோகிராம் மற்றும் அடிப்படை ரத்தப் பரிசோதனைகளைச் செய்து கொள்ளலாமே?!

1977ல் இந்தத் திட்டம் அரசு மருத்துவமனைகளில் அறிமுகமானது. சென்னையில் பொது மருத்துவமனை, ஸ்டான்லி, கீழ்ப்பாக்கம், ராயப்பேட்டை மருத்துவமனைகளில் இந்த வசதி உள்ளது. தினமும் நாற்பது பேர் என்கிற அளவில் இத்தகைய மாஸ்டர் செக்கப்களைச் செய்யலாம். என்றாலும் சராசரியாக பத்து பேர் வருவதே அதிகம்.

காரணங்கள் பல. முக்கியமாக அரசு மருத்துவமனை ஊழியர்கள் (பெரும்பாலும் டாக்டர்களும்கூட) புன்னகை, காலை வணக்கம் போன்ற அடிப்படை நாகரிகப் பண்புகளைக்கூட நோயாளிகளிடம் வெளிப்படுத்துவதில்லை. தவிர அரசு மருத்துவமனைகளின் சுத்தம் குறித்த அச்சுறுத்தும் பிம்பமும் மிகப் பிரசித்தமானதுதான்.

ஏழைகள், நோய்கள் வந்தபின் மருத்துவமனைகளை நாடுகிறார்களே தவிர, மாஸ்டர் செக்கப் என்பது அவர்கள் சிந்தனையில் பதியாத ஒன்று.

தவிர தொலைபேசியிலேயே அப்பாயின்மெண்ட், ரிப்போர்ட்களை வாங்கிக்கொள்ள எளிய நடைமுறை போன்றவற்றை அரசு மருத்துவமனைகளில் நடைமுறைப்படுத்தினால் பலன் அதிகரிக்கும்.

**நோ**யாளிகளிடம் மட்டுமே என்றில்லை, தங்களுக்குள்ளேயே உள்ள எத்திக்ஸ் அல்லாத இரு விஷயங்களும் கூட, டாக்டர்களுக்குச் சமீபகாலமாகப் பெரும் நெருடலாக இருக்கின்றன என்பதை அறிந்துகொள்ள முடிந்தது:

''நான் அந்த டாக்டரிடம் முதல்லே கன்சல்ட் செய்தேன். அவர் இந்த மருந்தை எல்லாம் சாப்பிடச் சொன்னார். எதுக்கும்

இன்னொரு டாக்டரிடம் காட்டலாமேன்னு தோணிச்சு. அதனால் உங்ககிட்டே வந்தேன்'' என்று நோயாளி ஆர்வமாகக் கூறுவார்.

எதிரே இருக்கும் டாக்டர், அந்த இன்னொரு டாக்டர் எழுதிக் கொடுத்த மருந்துச் சீட்டை ஒருமுறைக்கு இரு முறை உற்றுப் பார்ப்பார். ''நல்ல காலம் சரியான நேரத்துக்கு என்கிட்டே வந்து சேர்ந்தீங்க. இல்லேன்னா ரொம்ப



காம்ப்ளிகேட் ஆகியிருக்கும்'' என்பார்.

இப்படி சக டாக்டரின் மீது தவறாகக் குற்றம் சுமத்தி, அவரது நோயாளியை 'அபகரிக்கும் போக்கு' அதிகமாகிக் கொண்டு வருகிறது. காரணம், தொழில் பொறாமை.

ஒரு சக டாக்டரே சிகிச்சைக்காக வரும் போது அவரிடமிருந்து கட்டணம் வசூலிக்கக்கூடாது என்பது மரபு.

''ஆனால் கார்ப்பரேட் மருத்துவமனைகளில் பிற டாக்டர்கள் சிகிச்சைக்குச் சென்றால் மிகக் கேவலமாக நடத்தப்படுகிறார்கள். பதினைந்து வருடங்களுக்கு முன் சக டாக்டர் சிகிச்சைக்கு வந்தால், அவர் மருத்துவமனையில் அட்மிட் செய்யப்பட்டால்கூட தங்குவதற்கான தொகையை வசூலிக்க மாட்டார்கள். அல்லது குறைந்தபட்சமாக ஒரு தொகையைப் பெற்றுக் கொள்வார்கள். இன்று அதெல்லாம் கனவு'' என்று வருத்தப்பட்டார் ஒரு டாக்டர்.

ஒரு டாக்டர் தமது நோயாளியை வேறொரு

**இத்தொடரில் எழுதப்பட்ட சேவை உள்ளம் கொண்ட சந்தேகிக்க இடமளித்து**

ஸ்பெஷலிஸ்டிடம் அனுப்பினால், அந்தச் சிறப்பு டாக்டரின் தகுதி, தனது நோயாளியை அவர் பரிவுடன் கவனிப்பாரா என்ற அக்கறை, நோயாளியின் இருப்பிடமும் டாக்டரின் இருப்பிடமும் மிக அதிகத் தொலைவு இல்லாமல் இருக்கிறதா - போன்ற கோணங்களில்தான் யோசிப்பார். ஆனால் இப்போது கமிஷன் கிடைக்குமா என்றுதான் பார்க்கின்றனர்.

ஒரு நோயாளி தங்கள் மருத்துவமனையில் அட்மிட்டானால், அவர் டிஸ்சார்ஜ் ஆகும்போது செலுத்தும் பில் தொகையில் குறிப்பிட்ட பங்கு (பெரும்பாலும் 10 சதவிகிதம்) அந்த நோயாளியை அந்த மருத்துவமனைக்கு அனுப்பிவைத்த டாக்டருக்கு அளிக்கப்படுகிறது.

இத்தொடரைத் தொடர்ந்து



**விஷயங்கள் காரணமாக, டாக்டர்களையும் விட்டார்கள்!**

படிப்பதாகக் கூறிய ஒரு டாக்டர், நம்மிடம் தமது ஆதங்கத்தை வெளிப்படுத்தினார். ''நீங்கள் எழுதுவது உண்மைதான். ஆனால் இதனால் உண்மையாகவே சேவை உள்ளம் கொண்ட டாக்டர்களையும் நோயாளிகள் தவறாக நினைத்துவிட வாய்ப்பு உண்டே.''

இந்தக் கருத்தில் நியாயம் உண்டுதான். நிஜமாகவே தேவைப்படும் சூழலில், ''ஒரு எம்.ஆர்.ஐ. ஸ்கேன் எடுத்துட்டு வாங்க'' என்று ஒரு டாக்டர் கூறும்போதுகூட, 'இதில் ஏதேனும் கமிஷன் நோக்கம் உண்டோ?' என்ற சந்தேகம் நோயாளிக்கு வர வாய்ப்பு உண்டுதான். இது நமக்கும் வருத்தத்தைத் தருகிறது. ஆனால் இந்த நிலைக்குக் காரணம் இதுபோன்ற தொடர்களா? அல்லது தொழில் நல்லொழுக்கமின்றிச் செயல்படும் கணிசமான டாக்டர்களா?

போலி டாக்டர்களைப் பற்றிய செய்திகள் வந்தபோதுகூட, தங்கள் டாக்டர் குறித்து 'இவர் போலியோ?' என்று மக்கள் எண்ணவில்லை. சொல்லப்போனால் பொது எச்சரிக்கையான 'உங்கள் டாக்டரின் கிளினிக்கில் அவர் மருத்துவத் தொழில் செய்யலாம் என்பதற்கான பதிவுச் சான்றிதழ் மாட்டப்பட்டிருக்கிறதா என்பதை உறுதிசெய்துகொள்ளுங்கள்' என்பதில்கூட அவர்கள் கவனம் செலுத்தியதாகத் தெரியவில்லை.

ஆனால், இத்தொடரில் இடம்பெறும் தகவல்களைக் கொண்டு டாக்டர்களைப் பற்றிய மதிப்பீடு மாறிவிடும் என்று கருதினால், அதற்கு என்ன காரணம்? ஏற்கெனவே மருத்துவர்கள் குறித்து அவர்கள் மனத்தில் ஊறிவிட்ட சந்தேகத்தை, இத்தொடரின் தகவல்கள் உறுதிசெய்வதால்தான் அந்த (அவ)நம்பிக்கை.

**சேவை மனப்பான்மையுடன் நேர்மையாகச் செயல்படும் டாக்டர்களுக்கு, மனநெகிழ்வுடன் இந்தத் தொடர் சமர்ப்பணம்.**

**(முற்றும்)**




முள்ள பல்வேறு ஒற்றுமைகளைப் பிச்சு உதறிவிட்டார் கிரேஸி!

- எஸ்.ஏ.கேசவன், கடம்பூர் - 14

திண்டுக்கல் சாரதி- 'தித்திப்பு' என்று விமர்சித்த விதம் கல்கண்டு!

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

'யாரிடம் கடன் கேட்கக்கூடாது' என்ற கேள்விக்கு, தராசு அளித்த பதில்? பளீர்... களீர் ரகம்!

- க.சுந்தர், நெய்வேலி

மேலாண்மை பொன்னு சாமியின் நவரசப்பேட்டி படித்து பழரசம் சாப்பிட்ட திருப்தி அடைந்தேன்!

- பி.என்.ஜெய்குமார், திருவாரூர்-2

'திக்...திக்..திருமங்கலம்' - நமது அரசியலில் புரையோடிப்போன அவலங் களுக்கு, மற்றொரு நேரடி உதாரணம்!

- எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

எந்திரன் கைமாறிய ரகசியத்தைச் சொன்னதோடு, 'அந்தப் படத்தின் திருட்டு வி.சி.டி. இலவசமாக தென் தமிழ்நாட்டில் விநியோகிக்கப்படமாட்டாது' என்று சொல்லியிருப்பது 'கல்கி'க்கே உரிய குறும்பு.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

கருவேலம் மரத்திலிருந்து கரண்ட் தயாரிப்பது இன்றைய காலகட்டத்தில் மிகவும் அவசியமானது; அருமையானதும் கூட.

-ம.இராஜேந்திரன், லால்குடி

அடுத்தடுத்து ஆச்சரியப்படுத்தும் அற்புதக் கலை இலக்கியப் படைப்புக்கள் பற்றிய அறிவிப்பு ஆர்வமேற்படுத்துகிறது.

- ச.ஆ.கேசவன், இனாம் மணியாச்சி

இதிகாசக் கதைகள் அபத்தமானவை அல்ல - அவை அரிய பெரிய கருத்துக் களைக் கொண்ட கற்பனைச் சித்திரங்கள் என்பதை அமரர் கல்கி விளக்கியுள்ளது அபாரம்.

- கே.வி.ராமன், சென்னை-73

காஷ்மீர் தேர்தலில் வென்றவர் களுக்கு, ஜனநாயகக் கடமைகளை நினைவூட்டி, சிறந்த ஆட்சிக்கு நல்ல ஆலோசனைகள் வழங்கியிருக்கும் தலையங்கம் - ஆவணம்!

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

கிரிக்கெட் அம்பயருக்கும், எமனுக்கு

